சற்குருப்யோநம:

சுக்ல யஜுர்வேதத்திலுள்ள

# மண்டலப் பிராஹ்மணோப நிஷத்தும்

# சதானந்த அவதூத சுவாமிகள்

அருளிச்செய்த

# ராஜயோக பாஷ்யமும்.

இவை

கோவிலூர்

ஸ்ரீ வீரசேகரஞானதேசிகசுவாமிகளின்

பாதசேகரராய

ஸ்ரீ காசிகானந்த சுவாமிகளவர்களால்

தமிழில் வசன வடிவமாக

மொழி பெயர்க்கப்பட்டு,

மங்கலம்-ஷண்முக முதலியாரால்

சென்னை, கோமளேசுவரன்பேட்டை

சச்சிதானந்தம் பிரசில்

அச்சியற்றப் பெற்றன.

1915

 [அணா நான்கு

# பீடிகை.



சுக்ல யஜுர் வேத சம்பந்தமான இம்மண்டலப் பிராஹ்மணோபநிஷத் அஷ்டோத்ரசத உபநிஷத்துக்களின் அந்நியதமமாம்; தாண்ட முடியாத சம்சார சக்கரத்தை நிவிர்த்தி செய்யும். மகா பல யோகத்தையுடைய ராஜயோகத்தை ஜிஞ்ஞாசுக்கட்கு நல்ல சூட்சுமதர சாட்சாத்கார ஸ்தாபந உபதேசத்தை விதித்துப் பிரகாசிக்கின்றது.

ஆதித்ய மண்டலத்திலுள்ள புருஷனுக்கும் யாஞ்ஞவல்கியருக்கும் பிரஸ்நோத்ர ரூபமாகப்பிரவிர்த்தியாகலானும், பிராஹ்மண ரூபத்தாலும் இதற்கு மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தென்னும் பெயர், கௌஷீதகி பிராஹ்மணோபநிஷத் என்பதாதி போன்று உண்டாயிற்று.

அவற்றுள், ஐந்து பிராஹ்மணங்களிருக்கின்றன. முதற்கண் ராஜயோகத்திற்கு, அஷ்டாங்க அங்கங்களும், லட்சியத்திரயமும் கூறப்பட்டுள்ளன. இரண்டாவதன்கண் அந்தர் லட்சியாதியின் விஸ்தாரமாம்; மூன்றாவதன்கண் அமநஸ்க விஸ்தாரமாம்; நான்காவதன்கண் வியோம பஞ்சகமாம்; ஐந்தாவதன்கண் அமநஸ்க பலமாம்; என விஷய விபாகங்களாம்.

இந்த உபநிஷத்தின் அர்த்தத்தை ராஜயோகமென்னும் பாஷ்யம் ஸ்பஷ்டமாகப் பிரதிபாதிக்கின்றது. அவ்விப்பாஷ்யத்தைப் பிரஹ்மசூத்ராதி பாஷ்ய மியற்றிய சங்கராச்சார்ய சுவாமிகளே இயற்றின ரெனப் பிரசித்தமாகக் கூறுகின்றனர். அங்ஙனமே, அநேகமாக அப்புத்தகத்தின் அந்திம பாகத்தில் உபசம்ஹார வாக்யமும் பார்க்கப்படுகின்றது. ராஜயோக பாஷ்யத்திலுள்ள பத வாக்யாதிகளின் சைலியைப் பார்க்கும் சிலர்களோ இவ்விடத்து விவாதிக்கின்றனர். சில புத்தகங்களில் சதாநந்த அவதூத ரியற்றிய ராஜயோக பாஷ்யம் சமாப்தமென்று எழுதி யிருப்பதும் பார்க்கப்படுகின்றது.

இந்த ராஜயோக பாஷ்யம் யாதானுமொரு மூலத்தின் பிராமாண்யக் கிரஹணத்தினாலும், பதச்சேதாதியாலு மின்றி ஸ்வதந்தரமாகவே ராஜயோகத்தை நிரூபிக்கின்றது. ஆயினும், மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தின் வியாக்யாந பதத்தை யடைதற்கு யோக்ய மன்றாம். இருப்பினும், அர்த்தத்தினால் அதன் அர்த்தத்தைப் போதிக்கும் பரமாயிருத்தலின் அது பாஷ்ய ஸ்தாநத்தை யடைந்த தென்று வியவகரிப்பவர்கள் பாஷ்ய மென்று வியவகரிக்கின்றனர்.

இதன் முதலில் "இங்ஙனம் ஹடயோக லட்சணத்தை விஸ்தரமாக அநுஷ்டித்துப் பிரகிருத சத்குருவைப் பார்த்து இங்ஙனம் கூறினார்" என்றிங்ஙனம் உபக்கிரமமானது பார்க்கப் படுகின்றது. அதனாலும், ஹடயோக பாஷ்யம் இதனோடு சமான கர்த்தாவிற்கே இதன் பூர்வ பாகரூப மாகின்ற தென அநுமிக்கப்படுகின்றது. பின்னையோ இது பரியந்தம் அது பிரசித்தியாக யாண்டுங் காணப்பட வில்லை.

இதில் வையாசிக தர்சநத்தினின்றும் விலட்சணமான சில அர்த்தங்களும் அறியப்படுகின்றன. எங்ஙனம் இதில் பஞ்ச பூதங்களில் ஒவ்வொரு பூதத்தினின்றும் ஒவ்வொரு அந்தக் கரண, பிராண, ஞானேந்திரிய, அதன் விஷய, கர்மேந்திரியங் கட்கு ஒன்றொன்றோடு கூடி ஐந்துண்டாகின்ற தெனக் கூறி, ஞாதாவாய புருஷனை அந்தக்கரணங்களில் அந்தர்ப்பாவஞ் செய்து, அந்தக்கரணம் ஐந்தெனக் கூறப்பட்டிருக்கின்றது. பஞ்சதசியாதியிலோ சேர்ந்த பஞ்ச பூதங்களால் அந்தக்கரணங்கள் உண்டாகின்றன. அந்தக்கரணங்களும் நான்கே யென அறியப் படுகின்றது. "சர்வத்தாலும் அந்தக்கரணம்; அதுவிருத்திபேதத் தால் இருவகைத்தாம்; சம்சய ரூபம் மநமாகின்றது ; நிச்சய ரூபம் புத்தியாகின்றது"; "மநம், புத்தி, அகங்காரம், சித்தம், அந்தக்கரணமாம். இவற்றிற்குச் சம்சயமும், நிச்சயமும், கர்வ மும், ஸ்மரணமும் விஷயங்களாம்" என்று பஞ்சதசியில் கூறப் பட்டிருக்கின்றது. இப்பாஷியத்திறுதியில் ராஜயோகத்திற்கு எட்டு அங்கங்கள் நிரூபிக்கப்பட் டிருக்கின்றன. அந்த அங்கங்

களிலும், யம, நியம, பிரத்யாகாரங்கள், சம தமாதி ரூபங்கள், ஆசநப் பிராணுயாமங்கள் ஹடயோகம் போன்றே. தாரணை, தியாந, சமாதிகளும் ஹடயோகம் போன்றே. இம் மூன்றினுடைய சொரூப யதார்த்த விஷயத்தன்மை இவ்விடத்து விசேஷமாம். எட்டு அங்கங்களிலும், சொரூப யதார்த்த ஞாந சாஹித்யம் ஹடயோகத்தினின்றும் இவ்விடத்து வைலட்சண்ய மென அறியத்தக்கது.

அதன் பின்னர் வேறு சாஸ்திரங்களின் அப்யாச அபேட்சையால் ராஜயோக பாஷ்யத்திற்கு விஷய ஞாநத்தை ஸ்தாபிக்குந்தன்மையால் அதிசயம் காட்டப்பட்டிருக்கின்றது.

அதன் பின்னர் ஜடாஜட விவேக ஞாநத்தின் பொருட்டு ஆகாசாதி தத்துவ உத்பத்திக் கிரமத்தைத் தரிசிப்பித்து அஷ்டப் பிரகிருதி, ஷோடச விகார, தசேந்திரியாதி ரூபங்களாய சாங்கிய விசேஷ விசிஷ்டத்தால் பிரசித்தமான சில பதார்த்தங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

அதன் பின்னர்ப் பிரகிருதி அதன் விகாரத்தினின்றும் அந்நியத்தன்மையால் ஆத்மாவின் பிரகிருதி புருஷ விவேக மென்னும் வேறு பரியாய முடைய ஞாநத்தைச் சம்பாதித்து லய விதாநக் கிரமத்தால் ஆத்மாவினிடத்து விகாரங்களைச் சேர்க்குமிடத்து அதனுல் மநோ லயத்தினும் ஆத்மாவின் சொரூபத்தில் ஸ்திதி மோட்சமாகின்றது என்னும் கபில சம்பந்த சாங்கியர்களுடைய மதத்தைக் கூறியிருக்கின்றூர்.

அதன் பின்னர்ப் பிரகிருதி புருஷ ஈஸ்வரராய மூவர்களினது விவேகத்தால் ஞாநத்தைச் சம்பாதித்து லய விதாநக் கிரமத்தால் பகவானுய சர்வேஸ்வரனிடத்தில் தத்வ லயம் பாவிக்கப்படின், ஆத்மாவின் சொரூபாவஸ்தாநம் மோட்சமாகின்றதென்னும் சாங்கிய ஏகதேசிகளாய சேஸ்வர சாங்கியத்தைக் கூறும் பாதஞ்சலகர்ளுடைய மதத்தைக் காண்பிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள் லயகதிக் கிரமம் இங்ஙனம்—அதி சூட்சுமமான ஜீவன் சூட்சும மார்க்க ஆலம்பநத்தால் பூமிக்கு

மேலிருக்கும் ஏழு வாயு ஸ்கந்தங்களை யதிக்கிரமித்து, சுத்தாகாசத்தை யடைந்து, தமோ ரச சத்துவங்களை யதிக்கிரமித்து பகவான் நாராயணனை யடைக. ஆவஹ, பிரவஹ, உத்வஹ, சம்வஹ, சுவஹ, பரிவஹ, பராவஹ என்னும் பெயரையுடைய சப்த வாயு ஸ்கந்தங்களும், புராணங்களிலும், சித்தாந்தசிரோமணியிலும் காட்டப்பட்டிருக்கின்றன.

இதில் மூன்றிரண்டிலும் சிதத்வைத ஞானுபாவமே தாரக யோக மதத்தினின்றும் விசேஷமாம். இந்தப் பிரகிருத புருஷ பேத ஞானத்தையே நித்தியாநித்திய வஸ்து விவேக சப்தத்தால் தாரக யோகிகள் சிரவண பூர்வ விருத்தமென அங்கீகரிக்கின்றனர்.

அதன் பின்னர்த்தாரக யோக பதார்த்தம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. கேசரியாதி முத்திரைகளால் சச்சிதாநந்த அத்விதீய பிரஹ்மத்தை யறியும் ஹேது ரூபமான புருதகாதி ஆலம்பந சித்தத்தின் ஏகாக்கிரத்தைத் தாரகயோகமென அறிக

அதன் பின்னர் தாரக யோக சித்தியின் உபாய ரூபமான அந்தர் லட்சிய, பஹிர் லட்சிய, மத்திய லட்சிய, பேத பின்னத்தையுடைய லட்சியத் திரயத்தின் அவலோகநம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

அவற்றுள் அந்தர்லட்சியம் தேகத்தின் மத்தியில் மூலாதாரத்தினின்று மாரம்பித்து பிரஹ்மரந்திர பரியந்தமாயிருக்கும் சுழுமுனையின் மத்தியத்தி லுள்ள குண்டலினீயாம். பால ஊர்த்துவ பாகத்தில் நிரந்தரம் தேஜஸிருக்கின்றது. தர்ஜனியின் நுனியால் மறைக்கப்பட்ட கர்ணரந்தரமிரண்டினுற் கேட்கப்பட்ட கூங்கார சப்தம் சித்தத்தில் ஸ்தாபிக்கப்படின், சட்சுவின் மத்தியிலுள்ள நீல ஜோதி ஹிருதயத்தின் பங்கஜ மத்தியில் விளங்குகின்றது. தேஜஸின் சிகையுமாம். அதனத னவலோகநம் தாரக அவலோகந உபாயமாம்.

பஹிர் லட்சியமோ நாசியின் அக்ரபாகத்தில் 4-6-8-10-12 அங்குலங்களால் அளவிடப்பட்ட தேசத்தில் கிரமமாக தாரக யோக ஸ்புரணத்தாற் பார்க்கப்படும் நீலப்பிரகாச ஶ்யாமத்வ ரத்

நத்தோடு கூடிய சுக்ல பீத வர்ணத்தோடு கூடிய வியோம தத்துவமும்,புருதகரத்தைப் பார்க்கும் புருஷனுடை திருஷ்டியின் அக்ரபாகத்திலிருக்கும் மயூகங்கள் சிரசின் மீது 12-அங்குலத்திற்குச் சமானமான தேஜசும் உண்டாகின்றன. அதனதன் தரிசநத்தால் தாரக யோக சித்தி அறியத்தக்கது.

மத்திய லட்சியமோ பிராதக்கால சம்பந்த சித்ராதி வர்ண சூரிய மண்டலம் போன்றும், வந்நியின் ஜுவாலைக் கூட்டம் போன்றும், பிரகாசாதி யின்றிய அந்தரிக்ஷம் போன்றும், தாரக யோக காலத்தில் ஆகாசம் பார்க்கப்படும். அவ்வாகாசமும் ஐந்து விதமாம். அப்யாச வசத்தால் பிரகாசாதி விகார மின்றியதாகப் பார்க்கப்படும் ஆகாசம் குணரகித ஆகாசமாம். பிரகாசிக்கப்பட்ட தாரகங்களோடு கூடி யாதொரு காட தமம் போன்று பார்க்கப்படும் ஆகாசம் பரகாசமாம். காலாக்நி போன்று பிரகாசிக்கும் ஆகாசம் மகாகாசமாம். சர்வோத்கிருஷ்ட பிரகாசத் தன்மையால் விளங்கும் ஆகாசம் தத்துவாகாசமாம். கோடி சூரியப் பிரகாசத்தோடு கூடியதால் விளங்கும் ஆகாசம் சூரியாகாசமாம். இங்ஙனம் தாரக யோக காலத்தில் 5-ஆகாசங்களும் பார்க்கப்படுவதால் தாரகயோக சித்தி அறியத்தக்கது

இந்த வியோமத்தின்கண்ணே முதல் குணரகித ஆகாசத்தைவிட்டு, அந்தியத்திலுள்ள நிரதிசயாநந்தப் பரப் பிரஹ்ம லட்சண பரமாகாசத்தை எண்ணிக்கை செய்து வியோம பஞ்சகம் நான்காவது பிராஹ்மணத்தின் மூலத்தில் காட்டப்பட்டிருக்கின்றது.

அவற்றுள், ராஜயோகம், தாரகம் அமநஸ்கம் என இருவிதமாம். பூர்வ பாகம் தாரகமாம்.உத்தர பாகமோஅமநஸ்கமாம்.தாரகம் மூர்த்தி தாரகம், அமூர்த்தி தாரகம் என இருவிதமாம். அவற்றுள் நேத்ரத்தின் கீழ்ப்பரியந்த பாகத்திலிருக்கும் கணபதியாதி லட்சியத்தை ஆலம்பிக்கும் திருஷ்டி மூர்த்தி தாரகமாம். அமூர்த்தி தாரகம் இரண்டு புருவங்களின்மேல் தகாத்தை யவலம்பிக்கும் உள் திருஷ்டியாம். அமநஸ்கமோ பிராணேந்திரிய லய காரண பூர்வகம் பிரஹ்மாத்ம ஐக்கியத்தில் மநம் லயஞ்

செய்தலாம். அப்பொழுதே நல்ல உன்மநி அவஸ்தை பிராப்தமாகின்றது. ஜீவன் முத்தியும் அதனநந்தரம் உண்டாகின்றதென அறியத்தக்கது.

அதன் பின்னர் இரண்டாவது பிராஹ்மணத்தில் லட்சிய ஆத்மாவின் ஸ்வரூபமும், சாம்பவி முத்திரையும், சண்முகீகரித்தலும், ஜாக்ராதி பஞ்சாவஸ்தைகளும் தரிசிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

அவற்றுள் சாம்பவியே கேசரி யென்று சிலர் கூறுகின்றனர். சிவ சம்ஹிதையிலோ கேசரியின் லட்சணமே நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ''இருபுருவங்களின் மத்தியிலுள்ள திருஷ்டியை திடபுத்தியுள்ளவன் திடமாக ஸ்தாபித்து அநேக உபத்திரவங்களின்றிய வஜ்ராசநத்தி லிருந்து கொண்டு லம்பிகையின் ஊர்த்துவத்திலிருக்கும் கழுத்தில் நாநாதிக்கில் செல்லும் ரசங்களைப் பிரயத்தநத்தால் பண்டிதன் அமிர்தகூபத்தில் நன்கு சேர்க்க. இக்கேசரி முத்திரை பக்தருடைய அநுரோதத்தால் கூறப்பட்டதாம்'' என்று கூறப்பட்டிருக்கின்றது, சண்முகீகரணப் பிரகாரமும் அவ்விடத்தே கூறப்பட்டிருக்கின்றது. ''இரண்டு அங்குஷ்டங்களால் சுரோத்திரியங்களையும் தர்ஜநீகளால் இரண்டு நேத்திரங்களையும், மத்யம விரல்களால் நாசியின் ரந்திரங்களையும், அநாமங்களால் முகத்தையும் திடமாக யோகியானவன் வாயுவை நிரோதஞ்செய்க. எப்பொழுது இங்ஙனம் நிரந்தரஞ் செய்கின்றான் அப்பொழுது ஜோதிரூப ஆத்மாவைப் பார்க்கின்றான்'' என்று கூறப்பட்டிருக்கின்றது.

அதன் பின்னர் மூன்றாவது பிராஹ்மணத்தில் அமநஸ்க யோகமானது விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

அதன் பின்னர் நான்காவது பிராஹ்மணத்தின் விவரணம் பாஷ்யத்தில் பார்க்கப் படுவ தின்று. அது நிச்சயமாக ஆகாச பஞ்சகம் பிரதம பிராஹ்மணத்தில் அநேகமாக நிரூபிக்கப்பட்டிருத்தலா லென அறியப்படுகின்றது. நான்காவது பிராஹ்மணத்தின் முடிவிலும் யோகிகளால் நவசக்ரம், ஷடாதாரம், லட்-

சியத் திரய வியோம பஞ்சகங்கள் அவசியம் அறியத்தக்கன எனக் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள் ஒன்பது சக்ரங்கள் சௌபாக்ய லட்சுமி உபநிஷத்தில், ஆதாரசக்ர, ஸ்வாதிஷ்டாந சக்ர, நாபிச்சக்ர, ஹிருதயசக்ர, கண்டசக்ர, தாலுசக்ர, புரூசக்ர, பிரஹ்மரந்திர சக்ர, ஆகாசசக்ரங்களென விவரிக்கப்பட்டிருக்கின்றன. சடாதாரமும், மூலதார, ஸ்வாதிஷ்டாந, மணிபூரக அநாஹத, விசுத்த, ஆஞ்ஞா ரூபங்கள் யோக சூடாமணியாதி உபநிஷத்தில் பிரசித்தங்களாம். லட்சியத் திரயமும், வியோம பஞ்சகமும் பூர்வமே விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன வென அறியத்தக்கது.

அதன் பின்னர் அந்திம பிராஹ்மணத்தில் அமநஸ்க மென்னும் வேறு பரியாய நாம முடைய மனோ லயத்தின் பலம் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது.

இது மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தின் ராஜயோக பாஷ்யத்தின் சாராம்சமாம்.



# பாயிரம்.



அரியமறை யுட்சார மாகுந் தத்வ
மசியாதி வாக்கியத்தின் பொருளை நன்கு,
உரிமையா வுணர்வதற்கிங் காற்ற லின்றி
யுடலிலக மெனும்புத்தி யுடைய வென்னைச்,
சிறுமையாந் தேகநீ யலவென் றோதித்
தேற்றுவித்த வீரசே கரனின் பாதம்,
அருமையாப் போற்றியே சிந்தை செய்தே
யநுதினமு மறவாது பணிதல் செய்வாம்.

சுக்கிலமா யசுர்வேதந் தன்னி லுள்ள
தூயமண்ட லப்பிரா மணோபநிட தத்துக்,
தக்கதாச் சதாநந்த வவதூத னியற்றித்
தரும்ராஜ யோகபா ஷியமதுட னேதான்,
தக்கதமிழ் மொழியினல வசந மாகச்
சமைத்தனன்கோ விலூரதனில் வீற்றி ருக்கும்
மிக்கவிறை வீரசே கரன்றன் பாத
மேவுகா சிகாநந்த னெனும்பெயரான் மாதோ.



ஓம் தத்சத்

பரப்பிரஹ்மணே நம:

சுக்ல யஜுர் வேதத்திலுள்ள

# மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும்,

# ராஜ யோக பாஷ்யமும்.



## முதற் பிராஹ்மணம்.

**𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌦𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌿𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍁𑌦𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌪𑍂𑌰𑍍𑌣𑌸𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌾𑌦𑌾𑌯 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍇𑌵𑌾𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ॥**

**𑌓𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃.**

**𑌓𑌂 ॥ 𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑍋 𑌹 𑌵𑍈 𑌮𑌹𑌾𑌮𑍁𑌨𑌿𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌜𑌗𑌾𑌮 । 𑌤𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌤𑍍𑌵𑌾 𑌭𑍋 𑌭𑌗𑌵𑌨𑍍 ! 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯 ! 𑌆𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌨𑍁𑌬𑍍𑌰𑍂𑌹𑍀𑌤𑌿 ॥**

யாஞ்ஞவல்கிய மஹா முனி ஆதித்ய லோகஞ் சென்றார். அந்த ஆதித்யனை நமஸ்கரித்து, ஹே பகவன்! ஹே ஆதித்ய! ஆத்ம தத்வத்தைக் கூறும் என.

இங்ஙனம் ஹடயோக லட்சணத்தை விஸ்தாரமாக அநுஷ்டித்த ப்ரகிருத சற்குருவைப் பார்த்துக் கூறினார்; ராஜ யோகத்தைக் கிருபையாற் கூறும் என.

**𑌸 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 । 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍁𑌕𑍍𑌤𑌯𑌮𑌾𑌦𑍍𑌯𑌷𑍍𑌟𑌾𑌙𑍍𑌗𑌯𑍋𑌗 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥**

அந்த நாராயணர் கூறினார். ஞானத்தோடு கூடிய யமாதி அஷ்டாங்க யோகம் கூறப்படுகின்றது.

அவர், விநய வசனத்தையும் குரு பக்தருள் முதன்மையானவனுமான சிஷ்யனைப் பார்த்து "சாவதானமாகக் கேட்பாயாக" என்று ஆதரத்தோடு இந்த ராஜயோகத்தைக் கூறுகின்றார். ராஜாவிற்கு உபயோகமான யோகம் ராஜயோகமெனக் கூறப்படுகின்றது; அல்லது யோகங்கட்கெல்லாம் ராஜாவாயிருத்தலின், ராஜயோகமெனக் கூறப்படுகின்றது. முற்புகன்ற யோகங்கள் தேகப்பிரயாசையைச் செய்வன. இதுவோ, பிரயாசையின்றி மோட்சரூப புருஷார்த்தத்தைக் கொடுப்பது. ஹடயோகம் போன்று இதற்கும் எட்டு அங்கங்களுள. மற்றும், அவ்வங்கங்கள் ஹடயோகத்தில் விஸ்தாரமாகவிருக்கின்றன. இதன் சூட்சும அங்கத்தைச் சுருக்கமாகக் கூறுவேன்.

**𑌶𑍀𑌤𑍋𑌷𑍍𑌣𑌾𑌹𑌾𑌰𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌜𑌯𑌃, 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃, 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌤𑍍𑌵𑌂, 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌶𑍍𑌚 𑌏𑌤𑍇 𑌯𑌮𑌾𑌃 ॥**

சீத, உஷ்ண, ஆகார, நித்திரைகளை ஜயித்தலும், சர்வதா சாந்தியும், நிச்சலத்தன்மையும், விஷயத்தின்கண் இந்திரிய நிக்ரகத்தன்மையும் என்னுமிவை யமங்களாம்.

**𑌗𑍁𑌰𑍁𑌭𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌨𑍁𑌰𑌕𑍍𑌤𑌿𑌃, 𑌸𑍁𑌖𑌾𑌗𑌤𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍁𑌭𑌵𑌶𑍍𑌚, 𑌤𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍁𑌭𑌵𑍇𑌨 𑌤𑍁𑌷𑍍𑌟𑌿𑌃, 𑌨𑌿𑌃𑌸𑌙𑍍𑌗𑌤𑌾, 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑌵𑌾𑌸𑍋 𑌮𑌨𑍋𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌫𑌲𑌾𑌨𑌭𑌿𑌲𑌾𑌷𑍋, 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌨𑌿𑌯𑌮𑌾𑌃 ॥**

குரு பக்தியும், தத்துவமார்க்கப் பிரியமும், சுக சம்பந்த வஸ்து அநுபவமும், அவ் வஸ்து அநுபவத்தால்

சந்தோஷமும், நிஸ்ஸங்கத்தன்மையும், ஏகாந்த வாசத்தால் மனோ நிவிர்த்தியும், பலேச்சை யின்மையும், வைராக்கியத்தன்மையும் நியமங்களாம்.

**सुखासनवृत्तिः चिरवासश्चैवम् आसननियमो भवति ॥**

† சுகாசனத் திருத்தலும், நீடித் திருத்தலும் (ஆசனமாம்); இங்ஙனம் ஆசன நியம முண்டாகின்றது.

**पूरककुम्भकरेचकैः षोडशचतुःषष्टिद्वात्रिंशत्संख्यया यथाक्रमं प्राणायामः ॥**

பூரக, கும்பக, ரேசகங்களால் 16-64-32 எண்ணிக்கைகளாற் கிரமமாகப் பிராணாயாமஞ் (செய்க).

பிராணாயாமமோ ரேசக, பூரக, கும்பகங்களைப் பிரயத்தனமின்றித் தன்வசமான வாயுவால் தன தாதீனத்தைச் செய்து, பிராண வாயுவின் ஸ்திரத்தன்மையைச் சம்பாதிக்க. ஜகத் மித்தை யென்று ஸ்மரிக்க. இவை பிராணாயாம மென்று சாங்கிய யோக வித்துக்களாற் கூறப்படுகின்றது.

**विषयेभ्य इन्द्रियार्थेभ्यो मनोनिरोधनं प्रत्याहारः ॥**

இந்திரியத்தின் பிரயோஜனமாய விஷயங்களினின்றும் மனத்தை நிரோதித்தல் பிரத்தியாகாரமாம்.

தனது அந்தர்முகச் சித்தத்தாற் சைதந்யத்தைப் பரமாத்மாவினிடத்து லயஞ்செய்து நாநாவித விகாரத்தைக் கிரகிக்காத தன்மை பிரத்தியாகார மென்று கூறப்படுகின்றது.

**विषयव्यावर्तनपूर्वकं चैतन्ये चेतःस्थापनं धारणा भवति ॥**

---

† இஷ்டாசனத்தில் சுகமாயிருத்தல்.

விஷய வியாவர்த்தன பூர்வகம் சைதந்யத்தில் சித்தத்தை ஸ்தாபித்தல் தாரணையாம்.

பாஹ்யாந்தர சம்பந்தமான தத்துவங்களைப் பார்ப்பதிலுள்ள சித்த விருத்தி தாரணை யெனப்படும்.

𑌸𑌰𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑍇𑌷𑍁 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑍈𑌕𑌤𑌾𑌨𑌤𑌾 𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑍍 ॥

சர்வ சரீரங்களிலும் சைதன்ய ஏகத்தன்மை தியானமாம்.

சோகம் பாவத்தால் சுத்த அத்வைத சுவபாவ சர்வப் பிரகாசம் பரமாத்மா வென அறிந்து சர்வ பூத தயை யுடையவனாகின்றான். சமான ஆத்மாநுபவத்தால் சர்வத்திலும் சம திருஷ்டி உண்டாகின்றது. நித்திய திருப்தி தியானம் என்பது முனி சம்மதமாம்.

𑌧𑍍𑌯𑌾𑌨𑌵𑌿𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌸𑌮𑌾𑌧𑌿𑌃 ॥

தியானத்தின் விஸ்மிருதி சமாதியாம்.

பரம யோகிகளால், தத்துவ தர்சனத்தாற் சல மின்றிய ஸ்தைரிய சித்தத்தன்மையும், விகல்ப மின்றிய சித்த விருத்தியும், சதா மனோ நிர்மலத்தன்மையும், சாந்தியோடு கூடிய தன்மையும் சமாதி என்று கூறப்படுகின்றது.

𑌏𑌵𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 । 𑌯 𑌏𑌵𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌭𑌾𑌗𑍍𑌭𑌵𑌤𑌿 ॥

இங்ஙனம் சூட்சுமாங்கங்கள், எவன் இங்ஙனம் அறிகின்றான், அவன் முக்தியடைதற்கு யோக்யனாகின்றான்.

இந்தப் பிரகாரம் சூட்சும அஷ்டாங்க யோக தற்பானைச் சற்குரு உபதேசத்தால் ராஜ யோகத்தை யறிந்தவன் மோட்சத்தை யடைதற்கு யோக்யனாகின்றான்.

அற்றேல், சாங்கியாதி அனேக அந்நிய சாஸ்திரங்க ளிருக்கின்றன; அவையும் தத்துவப் பிரதானங்களே; அவற்றின் வாயிலாகப் பிரஹ்மப் பிராப்தி இருக்குக; இத னுபதேசத்தாற் பிரயோஜனமென்னே? யெனக்கூறற்க; சாஸ்திரங்களிற் குசலர்களா யிருக்கின்றவர்கட் குபயோகமான அவை முக்கிய விர்த்தியாற் பிரஹ்மத்தை யுபதேசிப்பன வல்ல. இதுவோ, அஞ்ஞான திருஷ்டியாற் பார்க்கப்படும் பிரஹ்மாண்டத்தைச் சுவீகரித்து, ஹே சிஷ்ய! கேட்பாயாக. இங்ஙனமே, பிண்டாண்ட மென்று விரலாற் காட்டுதல் வாயிலாகத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகின்றது. அதனால் விசேஷ ஞானம் சீக்கிரம் உண்டாகின்றது. ஆகலின், சர்வப் பிரயத்தனத்தால் யோகாப்பியாசமே பிரஹ்மப் பிராப்தியின்பொருட்டுச் செய்யத்தக்கது.

அவற்றுள், இவ்வித தத்துவ முண்டாகின்றது:—

ஆத்மாவினின்றும் ஆகாச முண்டாயிற்று; அதனினின்றும் ஞாதாவும் சமானனும் ஸ்ரோத்ரமும் சப்தமும் வாக்குமுண்டாயின. ஆகாசத்தினின்றும் வாயுவும், அதனினின்றும் மனமும், வியானனும், துவக்கும், ஸ்பர்சமும், பாணியும் உண்டாயின. வாயுவினின்றும் அக்னியும், அதனினின்றும் புத்தியும், உதானனும், சட்சுவும், ரூபமும், பாதமு முண்டாயின. அக்னியினின்றும் அப்பும், அதனினின்றும் சித்தமும், பிராணனும், ஜிஹ்வையும், ரசனையும், பாயுவும் உண்டாயின. அப்புவினின்றும் பிருதிவியும், அதனினின்றும் அகங்காரமும், அபான வாயுவும், கிராணேந்திரியமும், கந்தமும், உபஸ்தமும், உண்டாயின. சர்வவிடத்தும் ஆகாசாதி பஞ்ச தத்துவங்களு மிருக்கின்றன. சுரோத்திரம் அத்யாத்மம், சுரோத்திரத்தாற் கேட்கப்படும் வஸ்து அதிபூதம், திக்கு அதிதைவதம். துவக்கு அத்யாத்மம், ஸ்பர்சம் அதிபூதம், வாய்வு அதிதைவதம். சட்சு அத்யாத்மம், பார்க்கத்தக்க வஸ்து அதிபூதம், 'சூரியன் அதிதைவதம். ஜிஹ்வை அத்யாத்மம், ரசம் அதிபூதம், வருணன் அதிதைவதம். கிராணம் அத்யாத்மம், மூகரத்தக்க வஸ்து அதிபூதம், அஸ்வினிகள் அதிதைவதம். வாக்கு அத்யாத்மம், கூறத்தகும் வஸ்து அதிபூதம், அக்னி அதிதைவதம். பாணி அத்யாமம், கொடுக்கத்

தக்க வஸ்து அதிபூதம், இந்திரன் அதிதைவதம். பாதம் அத்யாத்மம், செல்லத்தக்க வஸ்து அதிபூதம், விஷ்ணு அதிதைவதம். பாயு அத்யாத்மம், விடுதல் அதிபூதம், மிருத்யு அதிதைவதம். குஹ்யம் அத்யாத்மம், ஆனந்தம் அதிபூதம், பிரஹ்மா அதிதைவதம்.

ஞாதா, மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என அந்தக் கரணங்கள் ஐந்து. ஞாதா புருஷன்; சம்சய ரூபம் மனம்; நிச்சய ரூபம் புத்தி; நல்ல விசார ரூபம் சித்தம்; நான் என்னும் அபிமான ரூபம் அகங்காரமாம். மனம் அத்யாத்மம், மநநஞ்செய்தல் அதிபூதம், சந்திரன் அதிதைவதம். புத்தி அத்யாத்மம், நிச்சயித்தல் அதிபூதம், பிருகஸ்பதி அதிதைவதம். சித்தம் அத்யாத்மம், சிந்தித்தல் அதிபூதம், க்ஷேத்ரஞ்ஞன் அதிதைவதம். அகங்காரம் அத்யாத்மம், அகங்கரித்தல் அதிபூதம், ருத்ரன் அதிதைவதமாம்.

இங்ஙனம் சர்வத்தையும் அறிதலானே அவற்றின் அதீதம் பிரஹ்மம் என்று ஞாநமுண்டாகின்றது. எங்ஙனம்? நான் ஆகாசாதி பூத குணங்களோடு கூடியவனுமன்று. அவற்றினின் றுண்டாய இந்திரியங்களுமன்று. நான் அந்தக்கரணமுமன்று. நான் பிராணாதி வாயுக்களுமல்ல. நான் வருணாசிரம ஆசாரத்தை யுடையவனு மல்ல. நான் தர்மாதர்மங்களைச் செய்பவனுமல்ல. நானிப் பிரபஞ்சமு மல்ல. பின்னையோ, நான் உபமானமின்றிய சத்திய ஞானனந்த லட்சணத்தால் லட்சிக்கப்படும் பரமாத்மாவே யென்று சிந்தித்துப் பரப்பிரஹ்மமாகுக; "சத்தியம் ஞானம் அனந்தம் பிரஹ்மம்" என்னும் சுருதியாலும், மற்றும், "அணுவிற் கணுவும் நானே; அப்படி மகத்தும் நானே; விசித்திர ஜகத்தும் நானே; பழையோனும் நானே; புருஷன் நான்; ஈசுவரன் நான்; இரண்ணியமயன் நான்; சிவரூபம் நானாயிருக்கின்றேன். பாணி பாத மின்றியவன் நான்; சிந்திக்கக் கூடாத சக்தி யுடையவன் நான்; சட்சுவின்றிப் பார்க்கின்றேன்; கர்ண மின்றிக் கேட்கின்றேன்;

நாஞவித ரூபமா யிருந்து நான் அறிகின்றேன். என்னையறிபவ னின்று ; சதா நான் சித்ரூபன்; அனேக வேதங்களால் அறி யப்படுபவன் நானே. வேதாந்தங்களைச் செய்த வேத வித்து நானே. எனக்குப் புண்ணிய பாப மின்று; நாச மின்று; ஜன்ம மின்று; தேகேந்திரிய புத்தி யன்று; பிருதிவியு மன்று; அப்பு மன்று; அக்னியு மன்று; வாயவு மன்று; அம்பரமு மன்று. இங்ஙனம் குகையிலிருப்பதாயும், நிஷ்களமாயும், அத் விதீயமாயும், சமஸ்த சாட்சியாயும், சதசத் தின்றிய தாயும், சுத்தமாயு முள்ள பரமாத்மரூபத்தை யறிந்து அடை கின்ருன்" என்னும் சுருதியாலும், முன் பிரஹ்ம பின்னன் நான் என்னும் பிரகிருதி வாசனையால் அமிழ்த்தப்பட்ட மித்தி யா ஞானத்தையுடைய நானே, இப்பொழுது பிரஹ்மமா யிருக் கின்றேன் என்னும் ஞானி முக்தனுகின்ருன். புகலப்படும் விகாராதிகளும் நா னன்று என விட்டு சத்திய ஞானி ஆகுக.

சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்காதி ஐந்து கர்மேந்திரியங்களும், சப்தாதி ஐந்து விஷயங்களும் மன மும், ஆகிய பதினறும் விகாரங்க ளென்று கூறப்படுகின் றன. ஐந்து பிராணவாயு ஞானேந்திரிய கர்மேந்திரிய மனோ புத்திரூபம் லிங்க சரீர மென்று கூறப்படுகின்றது பஞ்ச மகா பூத ஞானேந்திரிய கர்மேந்திரிய மனோ புத்திரூபம் சிலர் லிங்க மென்று கூறுகின்றனர். கர்த்ரு, ஞாத்ரு, போக்த்ராதிகள் நவ பதார்த்தங்கள். பஞ்ச மகாபூதங்களும், பிரகிருதியும், அகங்கார மும், மகத் தத்துவமும் அஷ்டப் பிரகிருதிகளாம். பிரஹ்ம, விஷ்ணு, ருத்ரரென மும்மூர்த்திகள். இச்சை, ஞானம், கிரியை யென மூன்று சக்திகள். விசுவன், தைசசன், பிராக்ஞன் என மூன்று ஜீவர்கள். பிராதக்கால, மத்தியாஹ்ன, அஸ்த பேதத் தால் மூன்று காலங்கள். காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷி ணக்நி பேதத்தால் மூன்று அக்நிகள். சுவர்க்க, மத்திய, பாதல பேதத்தால் மூன்று லோகங்கள். ஜாக்ர சொப்பன சுழுப்தி பேதத்தால் மூன்று அவஸ்தைகள். ஸ்தூல, சூட்சும, காரண

பேதத்தால் மூன்று தேகங்கள். † கார்மிகம், மாயிகம், ஆணவிகம் என மும் மலங்கள். ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதை விகம் என முத்தாபங்கள். தனமும், தாரமும், புத்ராதிகளும் மூவேடணைகள். சத்துவ, ரஜஸ், தம பேதத்தால் முக்குணங்கள். இவ்வெல்லாவற்றையும் மாயா கல்பிதமென அறிந்து, அவற்றி னின்றும் விலட்சணன் நான் என்னும் நிச்சய புத்தியைச் செய். அதன் பின்னர் இவ்வுபதேசத்தைக் கேட்பாயாக.

ஆகாசாதி பூதகுணங்களை நன்கு அறிந்து ஸ்தூலத்திற்கு சூட்சுமத்தில் அந்தர்த்தான விதி கூறப்படுகின்றது.—

பூமியில் கிராணத்தையும், ஜலத்தில் ஜிஹ்வையையும், அக்னியில் திருஷ்டியையும், வாயுவில் த்வக்கையும், ஆசாயத் தில் ஸ்ரோத்திரத்தையும், கிரமமாக யோகி சேர்க்குக.

இங்ஙனம் சாவதானத்தாற் பூதேந்திரிய ஐக்கியத்தைச் (செய்க). அஃதெங்ஙனம்?

பூமியை ஜலத்தில், ஜலத்தை வந்நியில், ஹோமம் பண் ணிய நெய் போன்று சிந்தித்து, வந்நியை வாயுவில், வாயுவை ஆகாயத்தில், ஆகாசத்தைக் கிரமமாகச் சித்தத்தில், சித்தத் தை அகங்காரத்தில், அடைந்த கிரமமாக அறிந்து, அகங் காரத்தைப் புத்தி மத்தியில் லயஞ் செய்து, கூடமான மதி யை மித தர்சனமத்தியில், அத்தர்சனத்தைப் பரமாத்மாவினிடத் தில், நல்ல யோகியானவன் முற் புகன்ற ரீதியால் பரமாத்வின் கண் சேர்க்க இங்ஙனஞ் செய்யில், பஞ்சீகரணம் உண்டா கின்றதென்று பரமயோகிகள் கூறுகின்றனர்.

இதற்கு இந்திரியாத்மா வென்றும், கேவலாத்மா வென்றும் இருவிதம் அங்கீகரிக்க. புத்தியால் பரமாத்ம சொரூப சச்சி தானந்த லட்சணம் அறியப்படுகின்றது. அதன் தர்சனத்தால் புத்தி சங்கோசித்தலின், ஆத்மைக்யம் உண்டாகின்றதென்று நன்கு புகலப்பட்டது.

---

† கர்மத்திற் சஞ்சரிக்கும் இந்திரியங்கட்குக் கார்மிக மென்று கூறப்படும்.

𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌪𑌞𑍍𑌚 𑌦𑍋𑌷𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌭𑌯𑌨𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌃 । 𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌨𑌿𑌸𑍍𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌮𑌾𑌲𑌘𑍍𑌵𑌾𑌹𑌾𑌰𑌾𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍇𑌵𑌨𑌮𑍍 ॥

தேகத்திற்குக் காமம், குரோதம், பயம், நிஶ்வாசம், நித்திரை என ஐந்து தோஷங்களுண்டாகின்றன. அவற்றின் நிவிர்த்தி நிஸ்ஸங்கல்பம், க்ஷமை, மிதாகாரம், பிரமாத மின்மை, தத்துவ சேவனம் என்பவற்றாலுண்டாம்.

இங்ஙனம் சாங்கிய மோட்ச லட்சணம் பிரபாதிக்கப்பட்டது. இப்பொழுது சாங்கிய ஏகதேசி மதம் கூறப்படுகின்றது; தேகத்திற்குக் காமம், குரோதம், நிஶ்வாசம், பயம், நித்திரை என்னும் பேதத்தால் ஐந்து தோஷங்களிருக்கின்றன. அவற்றின் பரிகார மார்க்கமோ, கிரமமாக காமம் ஸங்கல்ப மின்றியதாலும், குரோதம் க்ஷமையினாலும், நிஶ்வாசம் மித போஜனத்தினாலும், பயம் மயக்க மின்மையினாலும், நித்திரை சத்துவ சேவனத்தினாலும் உண்டாகின்றன.

𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌯𑌸𑌰𑍀𑌸𑍃𑌪𑌂 𑌹𑌿𑌂𑌸𑌾𑌦𑌿𑌤𑌰𑌙𑍍𑌗𑌂 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌵𑌰𑍍𑌤𑌂 𑌦𑌾𑌰𑌪𑌙𑍍𑌕𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌾𑌰𑌿𑌧𑌿𑌂 𑌤𑌰𑍍𑌤𑍁𑌂 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑌾𑌰𑍍𑌗𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌨𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 ॥

நித்திரையும், பயமுமாகிய சர்ப்பத்தையும், ஹிம்சாதி தரங்கத்தையும், ஆசையாகிய சுழலையும், தாரமாகிய சேற்றையுமுடைய சம்சாரமாகிய வார்திியை (சமுத்திரத்தை)க் கடத்தற்குச் சூட்சும மார்க்கத்தை அவலம்பித்துச் சத்துவாதி குணங்களை அதிக்கிரமித்துத் (தாரகத்தைப் பார்க்க).

துக்கமாகிய ஜலத்தையும், வியாதி மிருத்யுவாகிய முதலையையும், பயமாகிய சர்ப்பத்தையும், ஹிம்சாதியாகிய தரங்கத்தையும், ஆசையாகிய சுழலையும், மனைவியாகிய சேற்றையும், நானா கல்பித சுகமாகிய ரத்நத்தையு முடைய சுவ சம்பந்தமான வஸ்துவோடு ஐக்கியமாய், சத்தியத்தை அதிக்கிரமித் திருக்கும் சம்சாரமாகிய சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு இஃதுபாயமாம். சுவயம் அதி சூட்சுமனான ஜீவன் சூட்சும மார்க்கத்தை அவலம்பித்துச் சப்த பவனங்களையுந் தாண்டிப் பிரத்யக் ரூபமாயிருந்து சிரேஷ்டமான ஆகாய கதியை யடைந்து, அவ்வாகாசத்தைத் தமசில் ஸ்தாபிக்க; தமத்தையும் ரஜசில் லீனஞ் செய்து, ரஜசையும் சத்துவத்திற் பிரவேசஞ் செய்க; சத்துவத்தையும் நாராயணனிடத்து லயஞ் செய்க; ஸ்ரீமன் நாராயணனுடைய பரம்பதத்தை யடைக. அப்பொழுது நித்தியாநந்த சுகம் அனுபவிக்கப்படுகின்றது. ஞாநத்தாலேயே மோட்ச முண்டா மென்னும் புத்தியாகிய எதனால் ஆத்மா அறியப்படுகின்றதோ, அது சாங்கியமாம். அதுவே சம்யக்ஞானமாம். இங்ஙனம் மோட்ச லக்ஷணம் கூறப்படுகின்றது.

தாரகமவலோகயேத் | ப்ரூமத்யவர்த்தி
ஸச்சிதாநந்ததேஜ꞉கூடரூபம் தாரகம் ப்ரஹ்ம |
ததுபாயம் லக்ஷ்யத்ரயாவலோகநம் ||

தாரகத்தைப் பார்க்க. புருமத்தியி லிருக்கும் சச்சிதாநந்த தேஜஸை யுடைய கூடரூப தாரகம் பிரஹ்மமாம். அத னுபாயம் லட்சியத் திரயத்தைப்பார்த்தலாம்.

இங்ஙனம் புகன்ற சாங்கியத்தினின்றும் தாரகம் சிரேஷ்டமென்று தாரக யோகிகள் அங்கீகரிக்கின்றனர். ஹே பிராகிர்த! அதன் லட்சணம் அதி விசித்திரம். நீ சாவதான மனத்தை யுடையவனாய்க் கேட்பாயாக. இது மிகவும் ரகஸ்யமாயினும், இதனை உனது பக்தியால் சந்தோஷத்தை யடைந்த நான் கூறுகின்றேன். அற்ப புத்தியை யுடைய புருஷர்கள் மந்தாலய ஹட யோகமாகிய ஆரண்யத்தில் நீண்ட காலம் சஞ்சரிக்கின்றனர்.

அவற்றை நன்கு தியாகஞ்செய்து குருமுகத்தால் தாரகத்தை யப்பியசிப்பரேயாயின், அப்பொழுது சித்தராகின்றனர். ஆகலின் தாரக யோகத்தை யிங்ஙனம் அப்யாசஞ் செய்க.

நன்கு மூடிக்கொண்ட நேத்திரத்துடனுவது, சிறிது திறந்த நேத்திரத்துடனுவது, உள் நேத்திரத்தால் புருவத்தின் மேல் சச்சிதாநந்த தேஜசுடைய கூடரூபப் பரப்பிரஹ்மத்தைப் பார்க்க. தாரகாக்ர விர்த்தியால் லட்சியத்தை ஆகாசத்தில் குருமுகமா யடைந்திருப்பனேயாயின், அப்பொழுது தாரகயோகஞ் சித்திக்கின்றது. அதனை அப்யசிக்கின்றவர்கள் தாரக யோக சித்தர்க ளாகின்றனர். பிராணயாமாதி அனுஷ்டானப் பிரயாசமின்மையால் தாரக யோகமே உத்தம மென்று பரமயோகிகள் கூறுகின்றனர். மற்றும் — லட்சியத்திரயம் தாரக யோகிகளா லறியப்படுகின்றது. ஆகலின் குருவாக்கியத்திற் சிரத்தை யுடைய நீயும் தாரகத்தை அப்யாசஞ் செய். அப்யாசஞ் செய்யும் புருஷனைக் கடக்கச் செய்தலின் தாரமாம். தாரமே தாரக மெனப் படும்; தன தர்த்தத்தில் கப்பிரத்தியயம் விதிக்கப்படுதலின். தாரகமாகிய யோகம் தாரகயோகம் என்பது பொருளாம். ' யுஜிர் யோகே '' என்னும் தாதுவினின்று முண்டாய் ஜீவேசப்வரர்களினது பேதத்தைச் செய்யும் அஞ்ஞானத்தைப் பரித்தியாகஞ் செய்து ஐக்கியத்தைச் செய்தலின் யோக மெனப்படும்.

பிரஹ்மத்திற்கு ஜீவத்தன்மை அவித்தியா உபாதிகம்; பிம்பப் பிரதிபிம்ப முக பேதத்தைச் செய்யும் தர்ப்பணம் போன்று. ஆகாச பேதத்தில் கடாதிகள் போன்று; சூரிய பேதத்தில் ஜல பாத்திரம் போன்று; சற்குரு உபதேசத்தால் ஞானக்கினியால் அஞ்ஞான உபாதி நஷ்டமாயின், பிரஹ்மம் ஒன்றே அத்விதீயம், கேவலம் எஞ்சுகின்றது.

" எப்பொழுது இருள் அன்று அது தினமு மன்று, இரவு மன்று, சத்து மன்று, அசத்து மன்று, கேவலம் சிவனே அது அக்ஷரம், அது சூரியன், சிரேஷ்டம், பிரஞ்ஞை, அதனல் முன்னரே விஸ்தாரமாயிருக்கின்றது.'' என்னுஞ் சுருதியானும்,

நிலை யில்லாத சரீரங்களில் மகத்தாயும், விபுவாயு மிருக்கும் அசரீரமான ஆத்மாவை யறிந்து தீரன் சோகத்தை யடையான்'' என்னும் சுருதியானும். இதனால் தாரகத்தா லறியப்படுவது பரமாத்மா வென்பது பலிதார்த்தமாம்.

𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌾𑌦𑌾𑌰𑌭𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌭𑌾। 𑌤𑌨𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑌟𑌿𑌤𑍍𑌕𑍋𑌟𑌿𑌸𑌮𑌾 𑌮𑍃𑌣𑌾𑌲𑌤𑌨𑍍𑌤𑍁𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾 𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌿𑌨𑍀। 𑌤𑌤𑍍𑌰 𑌤𑌮𑍋𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃। 𑌤𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃। 𑌤𑌰𑍍𑌜𑌨𑍍𑌯𑌗𑍍𑌰𑍋𑌨𑍍𑌮𑍀𑌲𑌿𑌤𑌕𑌰𑍍𑌣𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌦𑍍𑌵𑌯𑍇 𑌫𑍂𑌤𑍍𑌕𑌾𑌰𑌶𑌬𑍍𑌦𑍋 𑌜𑌾𑌯𑌤𑍇। 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 𑌮𑌨𑌸𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑌨𑍀𑌲𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿। 𑌏𑌵𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇𑌽𑌪𑌿॥

மூலாதாரத்தினின்று மாரம்பித்துப் பிரஹ்ம ரந்திர பரியந்தம் சுழுமுனை சூரியப் பிரபையாம். அதன் மத்தியில், தடித்கோடி சமானமான மிருணாளதந்து சூட்சுமமான குண்டலினியாம். அவ்விடத்துத் தமத்தின் நிவர்த்தியாம். அதன் தர்சனத்தால் சர்வ பாப நிவிர்த்தியாம். தர்ஜன்யத்தின் நுனியால் மூடப்பட்ட கர்ண ரந்தர மிரண்டில் பூத்கார சப்த முண்டாகின்றது. அவ்விடத்து ஸ்திதமான மனதில் சட்சுவின் மத்தியி லுள்ள நீலஜோதி பார்க்கப்படுகின்றது. இங்ஙனம் ஹிர்தயத்தின்கண்ணும்.

இந்த மூன்று லட்சணங்க ளெவை யென் றிவ்விடத்துக் கூறப்படுகின்றது:—தேக மத்தியில் பிரஹ்ம நாடியாய சுழுமுனை சூரிய ரூபமாய்ப் பூரணச்சந்திர ப்ரகாசமா யிருக்கின்றது. அதுவும் மூலாதாரத்தினின்று மாரம்பித்துப் பிரஹ்ம ரந்தர பரியந்தம் செல்லுகின்றது. அதன் மத்தியில் தடித் கோடி சமான காந்தியால், மிர்ணா சூத்திரம் போன்று சூட்சும அங்கத்தை

யுடைய குண்டலினி பிரசித்தமா யிருக்கின்றது. அதனைப் பார்த்து, மனத்தானேயே புருஷன் சர்வ பாப பந்த விநாச னாயி லாய் முக்தனாகின்றான். பால, ஊர்த்வக, லலாட, சசிமண்ட லத்தில் நிரந்தரம் தேஜஜைசத் தாரக யோக விஸ்புரணத்தால் பார் க்கிற் சித்தனாகின்றான். தர்ஜனியின் நுனியால் மறைக் கப்பட்ட கர்ண ரந்தரங்களில் பூத்கார சப்த முண்டாகின்றது. அவ்விடத்து ஸ்திதமான மனத்தில் சட்சுவின் மத்தியி லுள்ள நீலஜோதி ஸ்தலத்தைப் பார்த்து, அந்தர் திருஷ்டியால் சமான ரகிதமான சுகத்தை யடைகின்றான். இங்ஙனம் ஹிருதய தாமரையின் மத்தியில் விளங்கும் தேஜஸின் சிகா தர்சனத்தா லும் பரமயோகியால் கற்பிக்கப்பட்ட அந்தர் லட்சிய லட்சணம் அறியத்தக்கது. சர்வமும் முமுட்சுக்களால் உபாசித்தற்கும் யோக்யமே.

𑌬𑌹𑌿𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌨𑌾𑌸𑌾𑌗𑍍𑌰𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌷𑌟𑍍𑌷𑌡𑌷𑍍𑌟𑌦𑌶𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌿𑌭𑌿𑌃 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣 𑌨𑍀𑌲𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌶𑍍𑌯𑌾𑌮𑌤𑍍𑌵𑌸𑌦𑍃𑌗𑍍𑌰𑌕𑍍𑌤𑌭𑌙𑍍𑌗𑍀𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑍍𑌪𑍀𑌤𑌵𑌰𑍍𑌣𑌦𑍍𑌵𑌯𑍋𑌪𑍇𑌤𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿। 𑌸 𑌤𑍁 𑌯𑍋𑌗𑍀। 𑌚𑌲𑌨𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾 𑌵𑍍𑌯𑍋𑌮𑌭𑌾𑌗𑌵𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑍁𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌮𑌯𑍂𑌖𑌾 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇। 𑌤𑌦𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾 𑌭𑌵𑌤𑌿। 𑌶𑍀𑌰𑍍𑌷𑍋𑌪𑌰𑌿 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌙𑍍𑌗𑍁𑌲𑌮𑌾𑌨𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌤𑌦𑌾𑌽𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑍇𑌤𑌿 ॥

பகிர் லட்சியமோ, நாசாக்ரத்தில் 4-6-8-10-12 அங்குலங்களால் கிரமமாக நீலப்பிரகாச, ஸ்யாமத்வ சமான ரத்தத்தோடு கூடி விளங்கி சுக்ல பீத வர்ண மிரண்டோடுகூடிய வியோம தத்துவத்தைப் பார்க்கின் றான். அவன் யோகி. சல திருஷ்டியால் வியோம பாகத்தைப் பார்க்கும் புருஷனுக்கோ திருஷ்டியின்

நுனியில் ஜோதிரூப மயூகங்க ளிருக்கின்றன. அதனால் திருஷ்டி ஸ்திரமாகின்றது. சிரசின்மீது துவாதச அங்குல சமான ஜோதி பார்க்கப்படுகின்றது. அப்பொழுது அமிர்தத்தன்மையை யடைகின்றான்.

பஹிர் லட்சியமோ, நாசிகாக்ரத்தில் 4—6—8—10—12 அங்குலங்களால் உள்ளே கிரமமாக நீலப் பிரகாச ஶ்யாமத்வ சமான ரக்தத்தோடு கூடி விளங்கும் சுக்கில பீதவர்ண வியோம தத்துவத்தை எவன் பார்க்கின்றான், அவன் யோகியாகின்றான். சல திருஷ்டியால் வியோம பாகத்தைப் பார்க்கும் புருஷனுக்குச் சமீபத்தின்கண்ணும், அல்லது நேத்திரத்தின் முன்னரும் ஜோதிரூப மயூகங்க ளிருக்கின்றன. அதன் தரிசனத்தால் யோகியாகின்றான். தபிக்கப்பட்ட சுவர்ண சமான ஜோதிரூப மயூகங்களை அப்புவி னங்கத்தின் முடிவின்கண்ணும், அல்லது பூமியின் கண்ணும் பார்க்கின்றான். அதனால் திருஷ்டி ஸ்திரமாகின்றது. சிரசின் மீது பன்னிரண் டங்குல முயர்ந்த பாகத்தில், அல்லது பிரதேச மாத்திரத்தில் ஜோதிக் கூட்டமானது பார்க்கப்படின், அதனைப் பார்ப்பவன் அமிர்தத் தன்மையை யடைகின்றான். யாதானு மோரிடத் திருப்பவனாலும், சிரசில் ஆகாசம் ஜோதி ஸ்வரூபத்தால் பார்க்கப்படுமாயின், அவன் யோகியாகின்றான். இங்ஙனம் பாஹ்ய லட்சிய லட்சணங் கூறப்பட்டது.

**அத² மத்⁴யலக்ஷ்யம் ப்ராதஶ்சித்ராதி³வர்ணஸூர்யசந்த்³ரவஹ்நிஜ்வாலாவலீவத் தத்³விஹீநாந்தரிக்ஷவத் பஶ்யதி ததா³காராகாரீ ப⁴வதி ||**

மத்திய லட்சியமோ, தன்னுள் சித்திராதி வர்ண சூரிய சந்திர வந்நி ஜுவாலைக் கூட்டம் போன்று அஃதின்றிய அந்தரிக்ஷம் போல் பார்க்கின், (அப்பொழுது) ததாகாரத்தை யுடைய ஆகாரியாகின்றான்.

இப்பொழுது மத்திய லட்சிய லட்சணங் கூறப்படுகின்றது. தன்னுள் சித்திராதி வர்ண அகண்ட சூரிய சந்திராதி போன்று வன்னிஜ்வாலையின் கூட்டம் போன்று, அஃதின்றிய அந்தரிக்ஷம் போன்று; பார்க்கின், அப்பொழுது ஆத்மா அவ்வாகாரமுடைய ஆகாரியாயிருக்கின்றது. அது மத்திய லட்சிய லட்சணமாம்.

**அப்யாஸாந்நிர்விகாரம் குணரஹிதாகாஶம்
பவதி | விஸ்ஃபுரத்தாரகாகார காடதமோபமம்
பராகாஶம் பவதி | காலாநலஸமத்யோதமாநம்
மஹாகாஶம் பவதி | ஸர்வோத்க்ருஷ்டபரம
த்யுதிப்ரத்யோதமாநம் தத்த்வாகாஶம் பவதி |
கோடிஸூர்யப்ரகாஶம் ஸூர்யாகாஶம் பவதி |
ஏவமப்யாஸாத்தந்மயோ பவதி | ய ஏவம் வேத ||**

அப்பியாசத்தால் நிர்விகாரமான குண ரகிதஆகாசமாகின்றது. பிரகாசிக்கப்பட்ட தாரகரூப காடதம சமானமான பராகாச மாகின்றது. காலாக்கினி சமானப் பிரகாச முடைய மகாகாசமாகின்றது. சர்வோத்கிருஷ்ட பரமப்பிரகாசப் பிரகாச சமானமான தத்துவாகாசமாகின்றது. கோடி சூரியப் பிரகாசமான சூரியாகாசமாகின்றது. இங்ஙனம் அப்யசிப்பதால் தன்மயமாகின்றது. எவன் இங்ஙன மறிகின்றான்.

மீண்டு மீண்டும் நிர்விகாரமாயின், அவ்விது குணரகித ஆகாசமாகின்றது. பிரகாசிக்கப்பட்ட தாரக ரூபத்தால் நன்கு பிரகாசிக்கப்பட்ட காடதம சமான பராகாச மாகின்றது. காலாக்னி சமானப் பிரகாச மகாகாசமாகின்றது. சர்வோத்கிருஷ்ட பரமப் பிரகாசப் பிரகாச சமான தத்துவாகாச மாகின்றது. கோடி சூரியப்பிரகாச வைபவசமான சூரியாகாசமாகின்றது. இங்ஙனம் பாஹ்யாந்தரத்தி லுள்ள வியோம பஞ்சகமாகிய தார

கம் லட்சிக்கப்படின், அவன் யோகியாயும், முத்தி பலத்தை யுடையவனாயும், அவ்வித வியோம சமானமு மாகின்றான். ஆதலின் தாரகமே, லட்சிய ஸ்தானமும், அமனஸ்க பலத்தைக் கொடுப்பதுமாம்

**𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌦𑍍𑌵𑌿𑌧𑌾 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌵𑌿𑌭𑌾𑌗𑌤𑌃 । 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌤𑍁 𑌤𑌾𑌰𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑌮𑌨𑌸𑍍𑌕𑌂 𑌤𑌦𑍁𑌤𑍍𑌤𑌰𑌮𑌿𑌤𑌿 । 𑌤𑌾𑌰𑌕𑌂 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌂 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌰𑌕𑌮𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌰𑌕𑌮𑌿𑌤𑌿 ॥**

அந்த யோகத்தையும், பூர்வோத்ர விபாகத்தால் இரண்டு பிரகாரமாக அறிக. பூர்வமோ தாரக மென அறிக. அதன் உத்தரமோ அமனஸ்க மென அறிக. மூர்த்தி தாரகம், அமூர்த்தி தாரகம் எனத் தாரகம் இருவிதமாம்.

அமனஸ்கம் யாது? தாரகமே பிற்பாதியால் அமனஸ்க மாகின்றது; முற்பாதியால் தாரகமேயாம். பிற்பாதியால் அமனஸ்க ராஜயோக மெனக் கூறப்படுகின்றது. அது யோக சாஸ்திரத்தில் "அந்த யோகமும் பூர்வோத்ர விபாகத்தால் இருவித மா யறிக. பூர்வம் தாரகம்; உத்தரம் அமனஸ்க மென்று மறிக" என்றும், "அமனஸ்கம் ராஜ யோகம் என்று பிரஹ்ம வாதிகள் கூறுகின்றனர்" என்றும் கூறப்பட்டிருக்கின்றன. இதற்கு இது பொருளாம்.—தாரக, அமனஸ்க பேதத்தால் ராஜயோகம் இரண்டு விதமாம். தாரகம், பூர்வ பாகம், உத்தர பாகம் அமனஸ்கம். தாரக ஸப்த சுவாரஸ் யத்தால் இருபுருவங்களின் மத்தியப் பிரதேசத்தில் லயமடையுங் கிரமத்தால், வாம தட்சண நேத்திர ரூப சந்திர சூரிய கதிக்குத் தாரகம் ஆஸ்ரயமாகலின்; இப்பொழுது அஸ்வினி நட்சத்ர பிரதம பாத சூர்யனிடத்து என்பதாதி தாரா ஆதீன கிரக சம்பந்தத்திற்கு ஜோதிஸ் சாஸ்திரப் பிரசித்தியான். இவ்விடத்தும் தாரகமாகிய நேத்திரங்களில் சந்திர சூரியப் பிரதிபலனத்தால்

அவை அவையேயென ஊகிக்கத்தக்கன. ஆகலின், தாரகங்களால் சூரிய சந்திர மண்டல தரிசனஞ் செய்யத்தக்க தெனப் பிராப்த மாகுங்கால் பிரஹ்மாண்டமாகிய ஆகாசத்தின் மத்தியில் சூரிய சந்திரமண்டலம் இரண்டு போன்று பிண்டாண்டமாய சிரசின் மத்தியி லுள்ள ஆகாசத்தில் சூரிய சந்திர மண்டல மிரண்டு மிருக்கின்றன வென்னும் நிச்சயத்தால் தாரகங்க ளால் அத்தரிசனம் இவ்விடத்தும் செய்யத்தக்கது; அவ்விரண் டின் ஐக்கிய திருஷ்டியால் பிராப்தம். அவ்விடத்து மனதும் காரண மெனக் கூறவேண்டும்; அதன் சம்பந்த மில்லையாயின், இந்திரியப் பிரவிர்த்திக்கு அவகாச மின்மையின். இதனால் மனம் தாரக ஐக்கிய விர்த்தியால் பார்க்கத்தக்கது என்றும், லட் சியம் ஆந்தர மெனச் செய்து உட் திருஷ்டிப் பிராதான்யத்தால் தாரகத்தானேயே அதன் வேத்தியத்தன்மை யுண்டாகின்றது. இதனானே அது தாரக மெனக் கூறப்படுகின்றது. அதுவும் மூர்த்தி தாரகம், அமூர்த்தி தாரகம் என இரண்டு விதமாம்.

**யதிந்த்ரியாந்தம் தந்மூர்த்திதாரகம் | யத்ப்ரூயுகா தீதம் தத் அமூர்த்திதாரகமிதி | உபயமபி மநஸா யுக்தம் அப்யஸேத் ||**

எது இந்திரியாந்தம் அது மூர்த்தி தாரகம். எது புருவங்களின் சம்பந்தத்தை அதிக்கிரமித் திருக்கின் றதோ அஃது அமூர்த்தி தாரகமாம். இரண்டையும் மனத்தோடு கூடி அப்யாசிக்க.

இது கூறப்பட்டதாகின்றது.—எது இந்திரியத்தின் முடி வோ, அது மூர்த்தி யுடையது. எது இருபுருவங்களை யதிக்ரமித் திருக்கின்றது அது அமூர்த்தி யுடையது. அற்றேல், இங்ஙனம் கூறவேண்டும்.—நேத்திரத்தின் கீழ் கணபதியாதியரை அது அறியாமையின், அதனினின்று ஊர்த்துவம் தகர மார்க்கத்தால் நாளப் பிரதேசத்தை யவலம்பித்து நன்கு மேற் செல்லுதலால் அதன்மே லிருக்கும் விசேஷ தரிசன மெனை. அவ்விடத்துக் கூறப்படுகின்றது —சர்வவிடத்தும் ஆந்தர பதார்த்த விசாரத்தில்

மனமே காரணம். மனத்தோடு கூடிய தாரகங்களானே அதன் மேலிருக்கும் தத்துவம் அறியப்படுதலின், மனதோடு கூடிய உட்பார்வையானே சச்சிதானந்த சொரூபம் பரப்பிரஹ்மமென அறியப்படுகின்றது. பிரஹ்மத்திற்கு என்ன லட்சணமெனும் சம்சயத்தில் ' எது சுக்லம் அது பிரஹ்மம்'' என்னும் உபநிஷத்தால் சுக்ல தேஜோமயம் பிரஹ்மமெனப் பிராப்தர். சுக்கிலாதிவர்ணங்கட்கு மாயாமயத்தால் அதன் அதீதம் பிரஹ்மமெனக் கூறவேண்டுமெனின், அற்றன்று; சுக்ல வர்ணம் பிரஹ்மம் என்னு மிவ்விடத்து விசேஷமாக அங்கீகரித்தலின். "அவ்விடத்து சூரியன் பிரகாசிப்ப தின்று; சந்த்ர தாரகங்களு மன்று. இந்த மின்னல்கள் விளங்குவன வல. இந்த அக்னி எங்ஙனம் விளங்குகின்றது? பிரகாச ரூபமான அதை (ஆஸ்ரயித்து) சர்வமும் பின்னல் விளங்குகின்றன. அதன் பிரகாசத்தால் இச்சர்வமும் விளங்குகின்றது'' என்னும் சுருதியால், கேவலம் சுக்லரூபம் ஜலத்திற்கு; செம்மை உருவம் அக்னிக்கு; கிருஷ்ணரூபம் அந்நத்திற்கு என்பது நியமம். "எது அக்னியின் செம்மை உருவம், அது தேஜசின் ரூபம்; எது ஜலத்தின் சுக்ல ரூபம், அது தேஜசின் ரூபம்; எது அன்னத்தின் கிருஷ்ண ரூபம் அது தேஜசின் ரூபம்'' என்னும் சுருதியால். இதனுல் சுக்ல தேஜோமயம் பிரஹ்மம் என்பது சித்தாந்தமாம். அந்தப் பிரஹ்மம் மந சககாரியோடு கூடிய சட்சுவாய அந்தர் திருஷ்டியால் வேத்தியம் என்பது பலிதார்த்தம். இது அமூர்த்தி தாரக லட்சணமாம்.

உமெநாயுக்தாஞக்ஷுர்ஹஷ்வுரா கவுர்காமரய ஹவதி। ஹூ்யேரஜயோஷிமெ தெஜஸ ஆவிஹூரவஃ। வஷதத்வூர்தாரகஃ ॥

மனத்தோடு கூடிய அந்தர் திருஷ்டி தாரகப் பிரகாசத்தின்பொருட்டாகின்றது. இருபுருவங்களின் மத்திய பிலத்தில் தேஜசின் ஆவிர்ப்பாவமாம். இது பூர்வதாரகமாம்.

மூர்த்தி தாரகமோ மனதோடுகூடிய சட்சுவானே அறியப் படுகின்றது; ரூபக்கிரஹணப் பிரயோஜனமாய மனம் சட்சு ரதீனமாகலின். பாகியத்தைப்போன்று ஆந்தரத்திலும் ஆத்ம, மன, சட்சு சம்யோகத்தானே ரூபக்கிரஹண காரியம் உதய மாகலின். பிரகிருதத்தில் மனதோடுகூடிய அந்தர் திருஷ்டி தாரகப் பிரகாசத்தின்பொருட் டாகின்றது. தாரகப்பிரகாச மென்பது இரண்டு புருவங்களின் மத்திய பிலத்தி லுள்ள திரு ஷ்டியாம். அதன் வாயிலாய் மேலிடத்துள்ள தேஜசின் ஆவி ர்ப்பாவ முண்டாகின்றது. அதனால் அவ்விதங் கூறப்படுகின் றது. அதனோடுகூட மன சம்பந்த தாரகம் நன்கு சேர்க்கப் பட்ட பிரயத்தனத்தால் இரு புருவங்களைச் சாவதானமாக மேலே கிஞ்சிற் றெழுப்புக. அதனால் க்ஷணத்தில் நன்குவிழிக் குங் காரண முடையதாகின்றது, இது பூர்வதாரகத்தின் பொரு ளாம்.

உத்தரம் த்வமநஸ்கம்| தாலுமூலே ஊர்த்வபாகே மஹாஜ்யோதிர் வித்யதே| தத்தர்சநாதணிமாதி ஸித்தி:| லக்ஷ்யே(அ)ந்தர்பாஹ்யாயாம் த்ருஷ்டௌ நிமேஷோந்மேஷவர்ஜிதாயாம் ச இயம் ஶாம்பவீ முத்ரா பவதி| ஸர்வதந்த்ரேஷு கோப்யமஹாவித்யா பவதி| தஜ்ஜ்ஞாநேந ஸம்ஸாரநிவ்ருத்தி:| தத்பூஜநம் மோக்ஷபலதம்||

உத்தரமோ அமனஸ்கம். நாவின் மூல ஊர்த்துவ பாகத்தில் மஹா ஜோதி யிருக்கின்றது. அதன் தரிச னத்தால் அணிமாதி சித்தியாம். உள்ளிலும் வெளி யிலு முள்ள லட்சியத்திலும், இமைப்பு விழிப் பின்றிய திருஷ்டியிலும் இச் சாம்பவிமுத்திரை யுண்டாகின்றது. சர்வ சாஸ்திரங்களிலும் ரகஸ்யமாக வுள்ள மகாவித் தையாகின்றது. அதன் ஞானத்தால் சம்சார நிவிர்த்தி யாம். அதன் பூஜை மோட்ச பலத்தைக் கொடுக்கின்றது.

மேலோ, அமூர்த்த அமனஸ்கம் என்னு மதுவே ராஜ யோகமாம். அதன் லட்சணம் அதிவிசித்திரமாகக் கூறப்படுகின்றது. யோக ஜோதிக் குண்டத்தில் சித்தமாய அத்வர்யுவால், புத்தியாய ஹோத்ருவால், அகங்காரமாய உத்காதாவோடு மனமாய யஜமானன், பிராணேந்திரியங்களாய ஹவிசுக்களைத் தியாகஞ் செய்கின்றான். இந்த யாகத்தால் நிர்மல ஸ்வரூபமான யஜமானன் சர்வ தேவ ரூபமாகின்றான்; எல்லோராலும் உபாசிக்கத் தக்கவனாகின்றான்.

இது பொருளாம். "ஆட்டின் ஹிருசயம், மேதசு கூறு" என்று பசு மனங்கட்கு ஹோமரூப லயார்த்தம் பிராப்தமாகுங்கால், மனம், புத்தி அகங்கார உபசம்மாரத்தை ஆசிரயிக்கின்றது. அவ்வித சித்தம், பிராணாதி ஹவிஸ் ஹோமத்தின் பின்னர் யஜமானனிடத்தில் லயத்தை அடைகின்றது. அந்த யஜமானன் யாக பல சித்தி யுடையவனாய், சமஸ்காரத்தி னதிசயத்தால் நன்கு விழிப்பான அவஸ்தையை யடைந்து, ஸ்வர்க்க பல நிர்விஷய பரமாத்மாவினிடத்தில் லீனமாகின்றான். இது ராஜயோகத்தின் அதிசயமாம்; மனோலயம் வேறு பிரகாரமாகப் பொருந்தாமையின்.

நாவின் மூலத்தின் மேற்பாகத்தில் பெரிய ஜோதிமண்டல மிருக்கின்றது. அது யோகிகளால் தியானித்தற்கு யோக்யம்; அணிமாதி சித்தியைக் கொடுப்பது மாகின்றது.

𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌜𑌲𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌭𑌵𑌤𑌿। 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌵𑍇𑌦𑍍𑌯𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍈𑌰𑌦𑍃𑌶𑍍𑌯𑌮𑍍। 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌰𑍇 𑌜𑌲𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂। 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌰𑍂𑌪𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑌪𑌰𑍇 । 𑌶𑍀𑌰𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌮𑌣𑍍𑌡𑌲𑌮𑌧𑍍𑌯𑌗𑌂 𑌪𑌞𑍍𑌚𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑍁𑌮𑌾𑌸𑌹𑌾𑌯𑌂 𑌨𑍀𑌲𑌕𑌣𑍍𑌠𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍। 𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑍇। 𑌉𑌕𑍍𑌤𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 । 𑌤𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮

𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌵𑌾 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌏𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌜𑍀𑌵𑌃 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶𑌕𑌃 𑌸𑍍𑌵𑌕𑌲𑍍𑌪𑌿𑌤𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌷𑌡𑍍𑌵𑌿𑌂𑌶𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿। 𑌏𑌵𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨 𑌜𑍀𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌶𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌵𑌯𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑌮𑌾𑌕𑌾𑌶𑌾𑌖𑌣𑍍𑌡𑌮𑌣𑍍𑌡𑌲𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌂 ॥

அந்தர் லட்சியம் ஜலஜோதி சொரூபமாகின்றது; மகரிஷியா லறியத்தக்கது; அந்தர் பாஹ்ய இந்திரியங்களா லறியத்தக்க தன்று. சஹஸ்ராரத்தில் ஜலஜோதி அந்தர் லட்சியமாம். புத்திக் குகையில் சர்வாங்க சுந்தரமாய புருஷரூபம் அந்தர் லட்சியமென்று அந்நியர் கூறுகின்றனர். சிரசினுள் ளிருக்கும் மண்டல மத்தியத்தி லுள்ள பஞ்ச முகங்களையும், நீலகண்டத்தையு முடைய பிரசாந்தமாய உமாசகாயனை அந்தர்லட்சியமென்று சிலர் கூறுகின்றனர். அங்குஷ்ட மாத்ர புருஷன் அந்தர் லட்சிய மென்று ஒருவர் கூறுகின்றனர். கூறிய சர்வ விகற்பமும் ஆத்மாவே. அந்த லட்சியத்தைச் சுத்த ஆத்ம திருஷ்டியால் எவன் பார்க்கின்றான் அவன் பிரஹ்ம நிஷ்டனாகின்றான். இருபத்தைந்து தத்துவங்களை யுடைய ஜீவன் தன்னாற் கற்பிக்கப்பட்ட இருபத்து நான்கு தத்துவங்களைப் பரித்தியாகஞ் செய்து, இருபத்தாறுந் தத்துவமாய பரமாத்மா நான் என்னும் நிச்சயத்தால் ஜீவன் முக்தனாகின்றான். இங்ஙனம் அந்தர் லட்சிய தர்சனத்தால் ஜீவன் முக்தி தசையில் தான் அந்தர் லட்சியமாய்ப் பரம ஆகாச அகண்ட மண்டல மாகின்றான்.

முதற் பிராஹ்மணம் முற்றிற்று.

மூடுதல் விழித்த லின்றிய திருஷ்டியிலும் பாஹ்யத்திலும் ஆந்தரத்திலுமுள்ள லட்சியத்திலும் இச்சாம்பவி முத்திரை யுண்டாகின்றது. சர்வ சாஸ்திரங்களிலும் ரகஸ்யமான மகாவித்தையு மாகின்றது; சம்சார நிவிர்த்தியாய பலத்தை அதுவே உண்டாக்குகின்றது. அம் முத்திரையை யறிந்தவன் வசித்தலால், பூமி பவித்திரமாகின்றது. அவனைத் தரிசித்து உலகத்திலுள்ள எல்லோரும் பவித்திரத்தன்மையை யடைகின்றனர் என்பது பரமார்த்தமாம். அவ்வித பரமயோகி பூஜை எவனுக்குக் கிடைக்கின்றது அவனுக்கு முக்தி யிருக்கின்றதென்பது தாத்பர்யமாம்; அவனுக்கும் அந்தர்லட்சிய சம்பந்த திடச்சித்த மிருத்தலின்.

அந்தர் லட்சியமோ, ஜலஜோதி சொரூபமாகின்றது. "ஜலம், ஜோதி, ரசம், அமிர்தம், பிரஹ்மம், பூ, புவ, சுவ (லோகம்), ஓம்' என்னும் காயத்ரி சிரசால், அவ்வந்தர் லட்சியமே, பரப்பிரஹ்மமும், ரகஸ்யத்திலும் ரகஸ்யதரமும், மகரிஷியா லறியத்தக்கது மாம். "இவ்வாத்மா பூர்ணம்" என்னு மிதனுல், பாஹ்ய இந்திரியங்களால் பார்க்கப்படுவ தின்று. "உள்ளிலிருப்பது" என்னு மிதனுல் மனத்தானும் அந்தப் பிரஹ்மம் அறியப்படுவ தின்று. பின்னையோ பரம குரு உபதேசத்தால் சகஸ்திராரத்தில் ஜலஜ்ஜோதி மேலான அந்தர் லட்சியமாகின்றதென்று கூறுகின்றனர். சிலர் புத்திக்குகையில் சட்சு, சுரோத்திராதி பரிபூர்ண அங்கத்தோடு சிருஷ்டி ஸ்திதி லய மின்றிய பரமாத்மா சர்வத்தையும் அறிந்து அந்தர் லட்சியமென்று ரகஸ்யமாகவே அதனைக் கூறுகின்றனர். இன்னுஞ் சிலர் சிரசினுள் ளிருக்கும் ஆகாச சூர்யமண்டல மத்தியி லுள்ள ஐந்து முகங்களையும் நீல கண்டத்தையு முடைய சாந்தனுய உமா சகாயனை அந்தர் லட்சிய மென்று கூறுகின்றனர். அங்குஷ்ட மாத்ர புருஷன் த்விதல அந்தர் லட்சிய மென்று கூறுகின்றனர். "அங்குஷ்டமாத்ர புருஷன் ஜோதி போன்று தூம மின்றியவன்", "அந்த ஆத்மாவை வித்வான் இங்ஙனம் அங்கீகரித்து அமிர்தத்தினின்று மமிர்தமான பிரஹ்மம்", "அங்குஷ்டமாத்ர புருஷன் அங்குஷ்டத்தை யாசிரயித்த ஈசுவரன்

சர்வ ஜகத்திற்கும் பிரபு உண்டாக்குகின்றான், விஸ்வத்தைப் புஜிக்கின்றான்'' என்னுஞ் சுருதிகளாலும், தசேந்திரிய புரத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் ஜீவாத்மாவைப் பிரஹ்மத்தோடு கூட ஐக்ய பாவனையால், சாத்திய அத்வைத விருத்தியாலாவது அல்லது சுத்தாத்வைத விருத்தியாலாவது எவன் பார்க்கின்றான் அவனே பிரஹ்ம நிஷ்டனாகின்றான். 25 தத்துவங்களையுடைய ஜீவன் தன்னாற் கற்பிக்கப்பட்ட 24 தத்துவரூபப் பிரகிருதியைவிட்டு (சங்கத்தை விட்டு என்பது பொருள்) 26-ந் தத்துவத்தை யுடைய பரமாத்மா நானென்று எவன் நிச்சயஞ் செய்கின்றான் அவன் ஜீவன் முக்தனாகின்றான்.

இங்ஙனம் அநேகப் பிரகாரமாகக் கூறிய அந்தர் லட்சிய தர்சனத்தால் ஸ்வயமேஅந்தர் லட்சிய ஆகாசமாகின்றான். அதுவே நாத பிந்து களங்களின் மூலமாகின்றது. ஏதனால் நாதாதி உத்பத்தியும் பிரஹ்மத்தினின்றும் உண்டாகின்றதென்னும் நிகமத்தால்.

யோகசாஸ்திரத்தில் முதற் பிராஹ்மணத்தின்
ராஜயோக பாஷ்யம் முற்றுப்பெற்றது.



## இரண்டாம் பிராஹ்மணம்.

**அத ஹ யாஜ்ஞவல்க்ய ஆதித்யமண்டலபுருஷம் பப்ரச்ச| பகவந்நந்தர்லக்ஷ்யாதிகம் பஹுதோக்தம், மயா தந்நஜ்ஞாதம்; தத்ப்ரூஹி மஹ்யம்||**

யாஞ்ஞவல்கியர் ஆதித்யமண்டல புருஷனை யடைந்தார். ஏ பகவன்! அந்தர்லட்சியாதிகளை அநேகப் பிரகாரமாகக் கூறப்பட்டது. அஃது என்னால் அறியப்படவில்லை. அதனை யென்பொருட்டுக் கூறும்.

இங்ஙனம் உபதேசித்த பிராகிருத பரமயோகியைக் குறித்து இதனைக் கூறுகின்றார்,—என்று அனேகப் பிரகாரமாக

உம்மாற் கூறு மிடத்து ஆத்மஸ்தானத்தை முக்கியமாக என்னுல் அறியப்படாமை போன்று சாமாந்யார்த்த ஆஸ்பதமாய் விட்டது. அஃது ஆதரத்தோடு கூறத்தக்கது.

ததேவ பஞ்சமஹாபூதகாரணம் தடித்கூடாபம் தத்வச்சது:பீடம் | தந்மத்யே தத்வப்ரகாஶோ பவதி | ஸோ(அ)திகூடோ அவ்யக்தஶ்ச | தஜ்ஜ்ஞாநப்லவாதிரூடேந ஜ்ஞேயம் | தத்பாஹ்யாப்யந்தர்லக்ஷ்யம் | தந்மத்யே ஜகல்லீநம் | தந்நாதபிந்துகலாதீதமகண்டமண்டலம் | தத்ஸகுணநிர்குணஸ்வரூபம் | தத்வேத்தா விமுக்த:|

அதனைக் கூறுகின்றார். பஞ்சமகாபூதகாரணம் தடித்கூடப் பிரகாசம் (என்று கூறப்படுகின்றது) அது போன்று சதுப்பீடமாம். அதன் மத்தியில் தத்துவப் பிரகாசம் உண்டாகின்றது. அஃது அதிகூடமும், அவ்யக்தமுமாம். அது ஞான வோடத்தி லேறி யிருப்பவனு லறியத்தக்கது. அது பாகியாந்தர லட்சியம். அதன் மத்தியில் ஜகத் லீனமாம். அது நாத பிந்து களாதீத அகண்ட மண்டலமாம். அது சகுண நிர்க்குண சொரூபமாம். அதனை யறிகின்றவன் முக்தனுகின்றான்.

கூறப்படுகின்றது.—பஞ்சபூதாதி வர்ணத்தோடு கூடிய அது திரி கூடஸ்தல மெனப் பிரசித்தமாம். அதுபோன்று சதுப்பீடமாம். அதன் மத்தியில் தத்துவப்ரகாச மிருக்கின்றது. அது அதிகூடமும், அதிரம்யமும் அவ்யக்தமுமாம். அதுவே ஆத்ம ஸ்தான மென்று குருவால் ஞான ஓடத்தி லேறி யிருப்பவனு லறியத்தக்கது. அது பாஹ்ய ஆந்தர மத்திய அந்தர் லட்சியமா யிருக்கின்றது. அதன் மத்தியில் சர்வ ஜகத்தும் லீனமென்று அறியத்தக்கது. மற்றும், அதுவே ரமிக்கத்தக்கது;

நாத பிந்து கலையோடு கூடியது; சகுண நிர்க்குணமா யிருக்கின்றது; மேலான நேத்திர உத்சவ காரணமாம் நித்ய ஆத்மஸ்தலமாம். "ஜலம் ஜோதி" என்னும் சுருதியால் ஸ்ரீமந் நாராயணனது ஸ்தலம் பிரசித்தமாம். அதனை யறிபவன் முத்தி யடைந்தவ னாகின்றான்.

𑌆𑌦𑌾𑌵𑌗𑍍𑌨𑌿𑌮𑌣𑍍𑌡𑌲𑌂, 𑌤𑌦𑍁𑌪𑌰𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑌣𑍍𑌡𑌲𑌂, 𑌤𑌨𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍁𑌧𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌣𑍍𑌡𑌲𑌂, 𑌤𑌨𑍍𑌮𑌧𑍍𑌯𑍇𑌽𑌖𑌣𑍍𑌡𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍇𑌜𑍋𑌮𑌣𑍍𑌡𑌲𑌂, 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌲𑍍𑌲𑍇𑌖𑌾𑌵𑌦𑍍𑌭𑌾𑌸𑍍𑌵𑌰𑌂, 𑌤𑌦𑍇𑌵 𑌶𑌾𑌮𑍍𑌭𑌵𑍀𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 ॥

ஆதியில் அக்நி மண்டலம். அதன் மேல் சூரிய மண்டலம். அதன் மத்தியில் சுதா சந்திர மண்டலம். அதன் மத்தியில் அகண்டப் பிரஹ்ம தேஜோ மண்டலம். அது மின்னலின் பிரகாசம் போன்று சுக்ல பாஸ்வரம். அதுவே சாம்பவி லட்சணமாம்.

ஆதியில் அக்நி பிம்பம். அதன் மத்தியில் அளவின்றிய பிரகாசத்தோடு விளங்கும் சூரிய பிம்பம். அதன் மத்தியில் நாசமின்றிய அமிர்தஆதார ஸ்தான சந்திர பிம்ப மிருக்கின்றது. அதன் மத்தியில் அங்குர ரூபத்தால் பரப் பிரஹ்ம மிருக்கின்றதென்று சிலர் கூறுகின்றனர். இந்தச் சர்வ ஜகத்திற்கும் பீஜமான சச்சிதாநந்த பரப் பிரஹ்ம தத்துவம் சோபிக்கின்றது. அந்த நீல ஜோதியும் கிஞ்சித் சுக்ல வர்ணமுடையது. அதன் மத்தியில் மின்னலின் பிரகாசம் போன்ற பிரகாசமான முக்ய தேஜ கூடஸ்வரூப, ஸ்வச்சப் பிகாசத்தின் சிகையின் மத்தியில் பரமாத்மா அணுரூபத்தா லிருக்கின்றது. அதுவே பிரஹ்மமும், அதுவே அறிவும், அதுவே ஈசுவரனும், அதுவே இந்திராதியுமாம். அங்ஙன மன்றே, "நீல ஜலத்தின் மத்தியி லுள்ள மின்னலின் பிரகாசம் போன்ற பிரகாசம் இருக்கின்றது. நீவாரசூகம் போன்ற மஞ்சள் சரீரம் அணு போன்று விளங்குகின்றது. அதன் சிகையின் மத்தியில் பரமாத்மா இருக்கின்றது. அது பிரஹ்மம், அது சிவன், அது விஷ்ணு,

அது இந்திரன், அது அக்ஷரம், பரம், ஸ்வராட், இவ்விதம் நான் பிரஹ்ம மாயிருக்கின்றே னென்று சாம்பவி முத்திரை யால் அறிதற்குச் சமர்த்தனாகின்றான்.'' என்னுஞ் சுருதியால்.

𑌤𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑍇 𑌤𑌿𑌸𑍍𑌰𑍋 𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑌃, 𑌅𑌮𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌿𑌮𑌾 𑌚𑍇𑌤𑌿 | 𑌨𑌿𑌮𑍀𑌲𑌿𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑌮𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃| 𑌅𑌰𑍍𑌧𑍋𑌨𑍍𑌮𑍀𑌲𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍋𑌨𑍍𑌮𑍀𑌲𑌨𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌿𑌮𑌾 𑌭𑌵𑌤𑌿| 𑌤𑌾𑌸𑍁 𑌪𑍂𑌰𑍍𑌣𑌿𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌃 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 | 𑌤𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌨𑌾𑌸𑌾𑌗𑍍𑌰𑌂 | 𑌤𑌦𑌾 𑌤𑌾𑌲𑍁𑌮𑍂𑌲𑍇 𑌗𑌾𑌢𑌤𑌮𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇| 𑌤𑌦𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑌖𑌣𑍍𑌡𑌮𑌣𑍍𑌡𑌲𑌾𑌕𑌾𑌰𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇| 𑌤𑌦𑍇𑌵 𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌭𑌵𑌤𑌿| 𑌏𑌵𑌂 𑌸𑌹𑌜𑌾𑌨𑌨𑍍𑌦𑍇 𑌯𑌦𑌾 𑌮𑌨𑍋 𑌲𑍀𑌯𑌤𑍇 𑌤𑌦𑌾 𑌶𑌾𑌂𑌭𑌵𑍀 𑌭𑌵𑌤𑌿 | 𑌤𑌾𑌮𑍇𑌵 𑌖𑍇𑌚𑌰𑍀𑌮𑌾𑌹𑍁𑌃 | 𑌤𑌦𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌨𑍍𑌮𑌨𑌃𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌂| 𑌤𑌤𑍋 𑌵𑌾𑌯𑍁𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌂 ||

அதன் தரிசநத்தில், அமா வென்றும், பிரதிபத் தென்றும், பூர்ணிமா வென்றும் மூன்று திருஷ்டிக ளாம். மூடிக்கொண்டு பார்த்தல் அமா திருஷ்டியாம்; அரைப் பாகம் திறந்து கொண்டு பார்த்தல் பிரதிபத் தாம்; சர்வத்தையும் விழித்துக்கொண்டு பார்த்தல் பூர்ணிமாவாம். அவற்றுள், பூர்ணிமாவின் அப்பியாசம் செய்யத்தக்கது. அதன் லட்சியம் நாசாக்ரமாம். அப்பொழுது நாவின் மூலத்தில் காடதமம் பார்க்கப்படுகின்றது. அத னப்பியாசத்தால் அகண்ட மண்டலாகார ஜோதி பார்க்கப்படுகின்றது. அதுவே சச்சிதாநந்தம் பிரஹ்ம மாகின்றது. இங்ஙனம் ஸஹஜாநந்தத்தில் எப்பொழுது மனம் லயத்தை யடைகின்றது, அப்பொழுது சாம்பவி உண்டாகின்றது. அதனையே கேசரி

யென்று சொல்லுகின்றனர். அதன் அப்யாசத்தால் மனஸ்தைரியமாம். அதனால் வாயு ஸ்தைர்யமாம்.

அந்த முத்திரையின் லட்சணம் கூறி யிருப்பினும் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றது. பிரதிபத், அமா, பூர்ணிமா என்னும் பெயரை யுடையன முத்திருஷ்டிக ளென்று அறியத்தக்கன. சற்று திறக்கும் சுபாவ முடையது பிரதிபத் திருஷ்டியாம். சர்வமும் மூடியிருக்கும் நேத்திரத்தைப் பார்க்கும் திருஷ்டி அமாவாம். சர்வத்தையு மறிந்து இழுக்கப்பட்ட நேத்திரமானது துவந்துவத்தைப் பார்த்தல் பௌர்ணமாசி யாகின்றது. திருக்கு நியமம் ஸ்திதமாயின், இங்ஙனம் பௌர்ணமாசி திருஷ்டியால் அப்யாசஞ் செய்யத்தக்கது. அப்பியாசஞ் செய்யப்பட்ட திருஷ்டி லட்சியம் நாசாக்ர மாகின்றது;நாசாக்ரத்தில் வைக்கப்பட்ட பூர்ணிமா திருஷ்டிக்குச் சம்யக் ராஜயோக பல ஜநகமாகலின். இதனால் பூர்ணிமாவைப் பார்ப்பவன் நாசாக்ரயோக அப்பியாசத்தைச் சதா செய்தல் வேண்டும். அது சித்திக்கில், அவனுக்குச் சாத்திய மின்மை யின்றென்பது பலிதார்த்தமாம். பூர்ணிமா திருஷ்டி சம்பந்தத்தினால் கூறப்பட்ட தாரக மார்க்கத்தால் அவலம்பிக்கப்பட்ட சித்தத்தில் நாவி னுனியில் 12 அங்குல அக்ர பாகத்திலும், உள்ளின் முற்பாகத்திலும் காடதம்மானது பார்க்கப்படுகின்றது. அந்தத் தம மத்தியத்தை நிரந்தரம் பார்க்க. அப்பொழுது அகண்ட மண்டலாகார ஜோதி பார்க்கப்படுகின்றது. அப்பொழுது சச்சிதாநந்தப் பிரஹ்மமாகின்றது. இங்ஙனம் சஹஜ லிங்க பரமாத்மாவில் மனோலயத்தைச் செய்து சலிக்கப்பட்ட சஞ்சாரமின்றித் தாரையோடு கூடி எவ னிருக்கின்றான் அவனும் சற்குருவாகின்றான்.இது சாம்பவி முத்திரையாகின்றது. அந்தர் பஹிர் லட்சியம், மூடுதல் விழித்த லின்றியதிருஷ்டி ஆகிய இவை சாம்பவி முத்திரையாகின்றன;சர்வ சாஸ்திரங்களின் ரகசியமாம்; அதனையே கேசரி யென்று சிலர் கூறுகின்றனர். அதனைச் சற்குருவினிடத்தினின்றும் அப்யசிக்க. எந்த அத்வயத்தை ஆத்ம திருஷ்டியால் அப்பியாசஞ் செய்யுங்கால் மனோவாயுக்கள் சாம்யபாவத்தாற் பிரவிர்த்திக்கின்றன, அதனால் மனோ ஸ்தைரியம் சித்திக்கில், அதன் வசத்தால்

வாயு ஸ்திரமாகின்றது. வாயுசஞ்சலமாயினும், மனோசஞ்சலமாயினும் பிராப்தமாயின், அவற்றின் வசத்தால் அந்நிய மெல்லாம் சஞ்சலத்தை யடைகின்றன. இதனால் ராஜயோக அப்யாசத்தால் மனோவாயு ஸ்தைரியத்தை யடைகின்ற தென்பது நிச்சயமாம். நூறு வருடம் ஹடயோக அப்பியாசஞ்செய்யினும் மனோவாயு லய மடைவ தின்று. ஆகவே கேசரி முத்திரையின் அப்யாசத்தால் பிரஹ்மத்தினிடத்து மனோவாயு லயஞ் செய்யத்தக்க தென்பது பலிதார்த்தமாம்.

**தத்³ருஷ்டௌ ஆதௌ தாரகவத் த்³ருஶ்யதே । ததோ வஜ்ரதர்பணம், தத: பரிபூர்ணசந்த்ரமண்டலம், ததோ நவரத்நப்ரபாமண்டலம், ததோ வஹ்நிஶிகாமண்டலம் க்ரமாத் த்³ருஶ்யதே ॥**

**ததா பஶ்சிமாபிமுக: ப்ரகாஶ: । ஸ்படிகதூம்ரபிந்துநாதகலாநக்ஷத்ரகத்யோததீபஸுவர்ணநவரத்நாதிப்ரபா த்³ருஶ்யந்தே । ததேவ ப்ரணவஸ்வரூபம் ॥**

அதன் சின்னங்கள்.— ஆதியில் தாரகம் போன்று பார்க்கப்படுகின்றது. அதனநந்தரம் வஜ்ர தர்ப்பணம். அதன்பின்னர் பரிபூர்ணச் சந்திர மண்டலம். அதனநந்தரம் நவரத்தினப் பிரபா மண்டலம். அதனநந்தரம் மத்யாஹ்ந அருக்க மண்டலம். அதனநந்தரம் வந்நி சிகா மண்டலம் கிரமமாகத் தோற்றுகின்றன.

அப்பொழுது, மேற்குமுகமான பிரகாசம்; ஸ்படிகத்தின் வெண்மை, விந்து நாத கள நக்ஷத்ர மின்னல் தீப சுவர்ண நவரத்தினாதிப் பிரபைகள் பார்க்கப்படுகின்றன. அதுவே பிரணவசொரூபமாம்.

அதன் தியான அப்யாசாதியில் பிரஹ்ம சொரூபங்களே அநேக சின்னங்களாக உண்டாகின்றன. தாரகம் போன்றும்,

வஜ்ர தர்ப்பணம் போன்றும், பரிபூரணச் சந்திர மண்டலம் போன்றும், ரத்ந தீபம் போன்றும், மத்யாஹ்ந அர்க்க பிம்பம் போன்றும், வஹ்நியின் சிகை போன்றும் (அநேக சின்னங்களாகத் தோற்றுகின்றன). இது அந்தர்லட்சிய லட்சணமாம். அதனால் பரமயோகியால் தியானுநுபவஞ் செய்யத் தக்கது. கிழக்கு முகமான யோகி சம்பூர்ண மண்டலாகார ஆத்ம சிந்தத்தைப் பார்ப்பானாயின், அவன் மேற்கு முகமாகப் பிரகாசத்தை அங்கீகரிக்கவேண்டும். தாரக மார்க்கத்தினின்றும்சற்றுப் பிரத்யக் ஸ்தானமானது பிரஹ்மஞானத்திற்குக்காரணமாகலின். மற்றும், மின்னல் போன்றபிரகாசம், ஸ்படிகத்தின் வெண்மை, பிந்து, நாத, கலா, நட்சத்திர, மின்னல், தீப, நேத்திர, சுவர்ண, நவரத்தினங்கள் ஆத்மாவின் பிரத்தியயங்களாகின்றன. அந்தப் பிரத்தியயத்தால் அறியப்பட்ட பிரஹ்மத்தையே, பரம், அமிர்தம், ஓங்காரரூபம், ஜலத்தின் ஜோதிஸ்தலமானசிவனும், விஷ்ணுவின் பரம்பதமு மென்று கூறுகின்றனர். அது யோக சாஸ்திரத்தில் "ஓங்காரம் அமிர்தம் பிரஹ்மம், ஜலத்தின் ஜோதிஸ்தலம் சிவனும், விஷ்ணுவின் பரம்பதமும் என்று பிரஹ்மவித்துங்கள் கூறுகின்றனர்."

**प्राणापानयोरैक्यं कृत्वा धृतकुम्भको नासाग्रदर्शनदृढभावनया द्विकराङ्गुलिभिः षण्मुखीकरणेन प्रणवध्वनिं निशम्य मनस्तत्र लीनं भवति।**

பிராணுபானன்களது ஐக்யத்தைச் செய்து, கும்பகத்தைத் தாரணஞ் செய்தவனுக்கு, நாசாக்ர தர்சன திடபாவனையால் இரண்டாகச் சேர்த்த அங்குலிகளால் பந்தனம் பண்ணுதலினால் பிரணவத் துவனியை அடக்கில், மனம் அவ்விடத்து லீநமாகின்றது.

பிராணுபானங்களின் ஐக்கியத்தைச் செய்து கும்பகஞ் செய்த புருஷனுக்கு, ஸ்திர பாவனையால் சுரோத்ர, நேத்திர, நாசா கோளகங்களை, இரண்டாகச் செய்த ஆறு அங்குலிகளால் நிரோதஞ் செய்து, லயஞ் செய்தலால் பிரணவ த்வனியை

நிவர்த்தித்து, அவ்விடத்திற் சிலர் லயத்தை யிச்சிக்கின்றனர். சிலர் சந்திர சூரியர்களினின்றும் பிரத்தியக் முகமா யிருந்து சதா அவ்வச் சின்னங்களைக் கூறிய மண்டலாகாரத்தாற் பார்க்கின்றனர். குரு உபதேசித்த கேசரி முத்திரையாய பூர்ணச் சந்திர திருஷ்டியால் பாஹ்யாந்தர தேஜசின் பிரகாச முண்டாகின்ற தென்பது நிச்சயமாம். அதன் திருஷ்டியின் அக்ர பாகத்தில் தேஜசின் பிரதி பலனம் ஆவசியக மென்று கூறப்பட்டு மிருக்கின்றது. இவ்வித லட்சண முடைய ஆசக்த புருஷனுக்குச் சர்வ கர்மங்களும் நாச மடைகின்றன வென்பது பலிதார்த்தமாம்.

ஆத்ம லிங்க அர்ச்சனை, அஹிம்சை, சர்வேந்திரிய நிக்கிரகம், அதிக தயாளுத்வம், க்ஷமை, சதா அகண்ட ஞான பூர்ணத்துவம், சத்தியம், தபோ நிஷ்டை, சர்வஞ்ஞத்துவம், என்னும் இவ்வஷ்ட புஷ்பங்களால் ஆத்ம லிங்க அர்ச்சனுபரன் ராஜ யோகியாகின்றான்.

தஸ்ய ந கர்மலேப: । ஸூர்யோதயாஸ்தமய
யோ: கில கர்மகர்தவ்யம் । ஏவம் விதுஷ்சிதாதி
த்யஸ்யோதயாஸ்தமயாபாவாத் ஸர்வகர்மாபாவ:।

அவனுக்குக் கர்ம லேப மின்று. சூரிய உதய அஸ்தமன பர்யந்தம் கர்மஞ் செய்யத் தக்கது. இங்ஙனம் அறியப்பட்ட சிதாதித்யனுக்கு உதய அஸ்தமன மின்மையின், சர்வ கர்ம அபாவமாம்.

மூடுதல் விழித்த லின்றிச் சம்சய மின்றிய ராகாகார திருஷ்டியை யுடைய பரம புருஷன் ராஜயோகி யாகின்றான். அவனை ஜாதியாதி ஔபாதிக கர்மம் பாதிப்ப தின்று. ஜீவிக்கும் பரியந்தம் கர்மஞ் செய்யத்தக்கதாயினும், ராஜயோகியை ஸ்பரிசிப்பதில்லை. அங்ஙன மன்றோ, கர்மத்திற்குச் சூரியாசிரியத் தன்மை பிரதிபலிக்கின்றது; அதன் உதய அஸ்தமன கால சம்பந்தங்கள் சந்தியாதிக் கிரியைகட்கு ஆவஸ்யகமாகலின். "உற்பத்தியாகி அஸ்தத்தை யடையும் ஆதித்யனை நன்கு தியானஞ்

செய்து வித்வானான பிராமணன் சகல கல்யாணத்தையு மடை கின்றான்" என்னுஞ் சுருதியால். இதனால் அஸ்த உதய சமயங்களில் கர்மஞ் செய்யத்தக்க தென்று பிராப்தமாங்கால், அஃதின்மையின் ராஜயோகிக்குப் பொருத்த மின்று. எதனால், அவனுக்குச் சதா சூரியன் தன் மத்தியிலிருப்பதாக ஆகின்றது? தத்துவ திருஷ்டியால் சித்தித்தலின். ஆகலின், உதய அஸ்தமய மின்மையின், கர்ம மின்றென்பது சித்தாந்தமாம்.

[illegible]

சப்தகால லயத்தினால் பகலிரவை யதிக்கிரமித்துச் சர்வ பரிபூரண ஞான உந்மனி அவஸ்தா வசத்தால் பிரஹ்ம ஐக்ய முண்டாகின்றது. உந்மநியால் அமநஸ்கம் உண்டாகின்றது. அதன் நிச் சிந்தை தியானமாம். சர்வ கர்ம நிராகரணம் ஆவாஹநம், நிச்சய ஞாநம் ஆசநம், உந்மநி பாவம் பாத்தியம், சதா

அமநஸ்கம் அர்க்யம், சதா பிரகாசம் ஆசமனம், அபார அமிர்த விர்த்தி ஸ்நாநம், சர்வாத்ம பாவனை கந்தம், திருக் சொரூபத்தின் ஸ்திதி அக்ஷதை, சித்பிராப்தி புஷ்பம், சிதக்நி சொரூபம் தூபம், சிதாத்ம சொரூபம் தீபம், பரிபூர்ணச் சந்திராமிர்தத்தின் ஏகீகரணம் நைவேத்தியம், நிச்சலத்தன்மை பிரதக்ஷிணம், சோஹம் பாவனை நமஸ்காரம், மௌநம் ஸ்துதி, சர்வ சந்தோஷம் விஸர்ஜனம் (விடுதல்) என்று எவன் இங்ஙனம் அறிகின்றான்.

சதுஷ்பீடத்தில் மநத்தை நிறுத்தி அதன் மேல் திரிகூடத்திலிருக்கும் அக்நி சூரிய இந்து மண்டல ஐக்யத்தை அந்தர் திருஷ்டியால் அறியத் தக்கது. அதுவே அஃதென்று அப்பொழுது உண்டாகின்றதெனச் சமரச பாவனையால் பிரஹ்ம ஐக்யத்தை யநுபவிக்கின்றவன் ராஜ யோகி யாகின்றான். அதனினின்று முண்டாகிய திருசியம் அதனில் லயத்தை யடைகின்றதென்று திருக் திருசிய அபாவம் அப்பொழு துண்டாகின்றது. இங்ஙனஞ் ஜீவன்முத்தியைக் கொடுக்கும் ராஜ யோகத்தை அங்கீகரித்து, ஹே பிராகிருத! கிருதார்த்தனாவாய். சப்த கால லயத்தினால் பக லிரவுகளை யதிக்கிரமித்தவனாய், சர்வ பரிபூர்ண ஞாந மநத்தினால் அடைந்த உந்மநி அவஸ்தா வசத்தால் பிரஹ்மைக்ய முண்டாகின்றது. நல்ல உந்மநி பாவ மநத்தினால் அப்பொழுதே உனக்கு அமநஸ்க முண்டாகின்றது. அவனுக்கு நிச் சிந்தை தியானம், சர்வ கர்ம நிராகரணம் ஆவாஹநம், நிச்சய ஞாநம் ஆசநம், நல்ல உந்மநி பாவம் பாத்யம், சதா அமநஸ்கம் அர்க்யம், சதா பிரகாசம் ஆசமநம், பரம அமிர்த விர்த்தி ஸ்நாநம், பாத்தோடு கூடிய ஸ்மரணம் வஸ்திரம், சர்வ பரிபூர்ண ஞாநம் உபவீதம், சர்வாத்மகத்தன்மைத் திருசிய லயம் கந்தம், திருக்கால் வரையப்பட்ட ஸ்திதி அட்சதை, சித் பிராப்தி புஷ்பம், சிதக்நி மண்டல சோரூபம் தூபம், சூர்யாத்மகத்தன்மை தீபம், பரிபூர்ண சந்திராமிர்த ரசத்தின் ஏகீகரணம் நைவேத்தியம், நிச்சலத்தன்மை பிரதட்சணம், சோஹம்

பாவனை நமஸ்காரம். பரமேஸ்வர ஸ்துதி மௌனம். சர்வ சந்தோஷம் விடுதல். இங்ஙனம் சர்வபூர்ண ராஜயோகிக்குச் சர்வாத்மக பூஜை யுண்டாகின்றது.

ஏவம் த்ரிபுட்யாம் நிரஸ்தாயாம் நிஸ்தரங்கஸமுத்ரவந்நிவாதஸ்திததீபவதசலஸம்பூர்ணபாவாபாவவிஹீநகைவல்யஜ்யோதிர்பவதி॥

இங்ஙனம் திரிபுடி நிரஸ்தமாகு மிடத்து, நிஸ்தரங்க சமுத்திரம் போன்றும், காற் றின்றிய விடத்திருக்கும் தீபம் போன்றும், சலந மற்ற சம்பூர்ண பாவாபாவ மின்றிய கைவல்ய ஜோதி உண்டாகின்றது.

தியானாதி திரிபுடிகள் நிவாரண மாகு மிடத்து, நிஸ்தரங்க சமுத்திரம் போன்றும், காற் றின்றிய விடத் திருக்கும் தீபம் போன்றும் அசலத்தன்மையால், சம்பூர்ண பாவத்தின்கண்ணே தன்மயத்தன்மை யென்று கூறப்படுகின்றது. பாவாபாவ மின்றிய விருத்தியால் அமிர்த பாவத்தை யடைந்து, சர்வாவஸ்தைகளும் விடுபட்டவன், கைவல்ய சித்தி பலத்தை யடைபவனாகின்றான்.

ஜாக்ரந்நித்ராந்தபரிஜ்ஞாநேந ப்ரஹ்மவித்பவதி॥

ஜாக்கிர நித்ராந்த பரிஞானத்தால் பிரஹ்மவித்தாகின்றான்.

ஜாக்ர நித்ராந்த ஞானத்தால் பிரஹ்ம வித்தாகின்றானென்னு மிது "ஸ்வப்நாந்த ஜாகரிதாந்தங்க ளாகியவையெதனால் பார்க்கப்படுகின்றது, அந்த மகத்தாயும் விபுவாயுமுள்ள ஆத்மாவை, தீரன் அறிந்து சோகத்தை யடைவ தில்லை" என்னும் சுருதியால் கூறப்படுகின்றது. ஆதித்யாதியால் அநுக்கிரகிக்கப்பட்ட மனாதி பதினான்கு கரணங்களால் சப்தாதி

ஸ்தூல விஷயங்களை யெப்பொழுது அறிகின்றான், அப்பொழுது ஜாக்ராவஸ்தை யாகின்றது. சர்வேந்திரிய உபரம காலத்தில் மந மாத்திரத்தானே ஸ்வப்நாவஸ்தை யாகின்றது. அவ்விடத்துச் சாட்சி மாத்ர ஆத்மா அறிவிக்கப்படுதலால், அதனை யறிந்தவன் பிரஹ்ம வித்தென்று நன்கு கூறப்பட்டது. ஜாக்ரத்தின் அந்தமாய இந்திரியத்தின்முடிவில் சுழுப்தி அவஸ்தையே யாகின்றது. அத னநந்தரம் ஸ்வப்நாவஸ்தை யென விய வஸ்தையாம். அங்ஙன மன்றோ, சோபாதிகத்திற்கு நித்தியத் தன்மை, பிரஹ்மத்தின் ஐக்கியாநந்த இச்சையின் ஸ்திதிப்பிராப்தியின்பொருட்டு ஜாக்ராவஸ்தையின்கண் பஹிர்முக னாயினும் நன்கு ஆலம்பிக்கப்பட்ட நித்திரையைப் பிரஹ்மத்தினிடத்து லயஞ்செய்து மிகுதிப்படுத்தப்பட்ட தேக பிராரப்த வசத்தினால் தமமானது அமிழ்ந்து போகின்றது. இதனால் சுழுப்தியில் தமோ ரூபப் பரப்பிரஹ்மத்தி னிடத்தில் ஜீவ ஐக்கிய முண்டாகின்றது. அதனால் அற்ப காலம் சுகமாக விருந்து தன்னிடத்து லயமான மநத்தால் ஸ்வப்நத்தைப் பார்க்கின்றா னென்பது சித்தாந்தமாம். ஸ்வப்நத்தின் முடிவில் சோபாதிகத்திற்கு மநோகோசாத்தன்மை பொருந்துகின்றது. அதனால் தத்வ ஞானத்தால் மோக்ஷ மென்று கூறப்பட்டது.

ஸுஷுப்திஸமாத்யோர்மநோலயாவிஶேஷே
ऽபி மஹதஸ்த்யுபயோர்பேத:, தமஸி லீநத்வா
ந்முக்திஹேதுத்வாபாவாச்ச | ஸமாதௌ ம்ருதித
தமோவிகாரஸ்ய தஸ்யாகாராகாரிதாகண்டாகா
ரவ்ருத்த்யாத்மகஸாக்ஷிசைதந்யே ப்ரபஞ்சலய
ஸம்பவாத், ப்ரபஞ்சஸ்ய மந:கல்பிதத்வாத்
தேந பேதாபாவாத், ப்ரபஞ்சஸ்ய பஹிர்கதத்வே
பி ப்ராந்திமாத்ரத்வாத் ||

சுழுப்தி சமாதிகளில் மநோ லயம் விசேஷ மின்றாயினும், அவ்விரண்டற்கும் மகத்தான பேத மிருக்கின்

றது. தமசில் லீநமா யிருத்தலினானும், மோக்ஷ காரணத்தன்மை யின்மையானும். சமாதியில் நசிக்கப்பட்ட தமோ விகாரத்திற்கு, அதனுகாரத்தால் ஆகாரியாய அகண்டாகார விருத்தி ரூப சாட்சி சைதந்யத்தின்கண் பிரபஞ்ச லயம் பொருந்துகின்றது; பிரபஞ்சம் மநத்தின் கல்பிதமாகலின்; அதனால் பேத மின்மையின். ஒருகாலத்து, பாஹ்யத்திற் செல்லினும் மித்தியாத்தன்மைப் பாவநத்தால்.

இங்ஙனம் மூன் றவஸ்தைகளின் நியமம் விசாரிக்கப்படின், சுழுப்தி சமாதிகட்குப் பேத மின்று; இரண்டற்கும் மநோ லயம் சமாநமாகலின். மநோ லயமே மோட்ச மென்று எப்பொழுது கூறப்படுகின்றது, அப்பொழுது கூறவேண்டுவ தின்று. அவ்விடத்தோ மந மிருத்தலின், மோட்ச காரண மின்மையே. ஆயின், இவ்விடத்து மோக்ஷத்திற்குக் காரணம் யாது கூற வேண்டும்? அவ்விடத்து இவ்விசேஷம் கிரகிக்கத் தக்கது. பரிச்சிந்ந மநத்தின் லயம் சுழுத்தியி லுண்டாகின்றது. சமாதியிலோ நசிக்கப்பட்ட தமம் அபரிச்சிந்நத் தன்மையை ஈஶ்வரனுக்குப் போன்று அடைகின்றது; அதனுகாரியாய அந்தக் கரணம் பூர்ண மாகலின். இரண்டின் ஐக்கியத்தில் பிரபஞ்ச லயம் பொருந்துகின்றது; மகா பூதாதிப் பிரபஞ்சம் மநக் கல்பித மாகலின், அதன் பின்னர்ப் பேதத்தின் கந்த மின்மையின் மோக்ஷ மென அறிக.

𑌸𑌕𑍃𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌤𑌸𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌾𑌨𑍁𑌭𑌵𑍈𑌕𑌗𑍋𑌚
𑌰𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌤𑍍𑌤𑌦𑍇𑌵 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌯𑌸𑍍𑌯 𑌸𑌞𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌕𑍍𑌰𑌮
𑌵𑌿𑌤𑌾 ॥ 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌸𑍁 𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 𑌵𑌿𑌤𑍍𑌯𑌾 𑌵𑌾
𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌵 𑌶𑌕𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 । 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍁 𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑍍𑌞𑍇𑌯𑌯𑍋𑌃 𑌧𑍍𑌯𑌾𑌨𑌧𑍍𑌯𑍇

யௌ லக்ஷ்யாலக்ஷ்யே த்3ருஶ்யாத்3ருஶ்யே சோ ஹாபோஹாதி3 விஹாய ஜீவந்முக்தோ ப4வேத் | ய ஏவம் வேத3 ||

ஒருதரம் பிரகாசிக்கப்பட்ட சதாநந்த அநுபவ மொன்றைக் கோசரிக்கும் பிரஹ்ம வித்து அதுவே யாகின்றான்.

எவனுக்குச் சங்கல்ப நாச மாகின்றது, அவனுக்கு மோக்ஷம் கையி லிருக்கின்றது. ஆகலின் பாவாபாவங்களை விட்டுப் பரமாத்மத் தியாநத்தால் முத்தனாகின்றான். மீண்டு மீண்டும் சர்வ அவஸ்தைகளிலும் ஞாந ஞேயங்களை, தியாந தியேயங்களை, லட்சியாலட்சியங்களை, திருசியாதிருசியங்களை, ஊஹ அபோ ஹாதியைப் பரித்தியாகஞ் செய்து ஜீவன் முத்தனாகின்றான். எவனிங்ஙன மறிகின்றான்.

பாஹ்யாந்தரங்களில் அபிமாந மின்றிய விருத்தியால் சதாநந்த அநுபவத்தால் எவன் சரிக்கின்றான், அவனும் முக்தனே. அஞ்ஞத்தன்மை யின்றிய ஞப்தியையும், ஞப்தி யின்றிய அஞ்ஞத்தன்மையையு மெவ னறிகின்றான், அவனே நித்தியாநித்தியார்த்த விவேகவா னாகின்றான். அதன் விவேகத்தை யடைந்தவனும், அஞ்ஞன் போன்று இருக்கின்றானெனின், அவன் மோக்ஷத்தை யடைந்தவனே. எவனுக்குச் சங்கல்ப நாச மாகின்றது, அவனுக்குப் பாவயோக சித்தியும், உந்மநி யவஸ்தா பரிபக்குவ மநோ சித்தியு முண்டாகின்றன. சங்கல்ப மாத்திரத்தில் லேச மிருக்குமாயின், அதுவே பந்தகாரண மாகின்றது. அதனால் பாவாபாவங்களைப் பரித்தியாகஞ் செய்து சர்வ பரிபூர்ண ஞாநத்தால் முக்தனாகின்றான். நிரந்தரம் சர்வ அவஸ்தைகளிலும் பிரயத்ந மின்றியவனாய், ஞாந ஞேய, தியாந தியேய, லட்சியாலட்சிய, திருசியாதிருசிய, ஊஹ அபோஹாதி

சர்வத்தையும் விட்டு நிச்சல சித்தனாய் எவ னிருக்கின்றான் அவன் ஜீவன் முத்தனாகின்றான்.

**𑌪𑌞𑍍𑌚𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌃 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑍍𑌸𑍍𑌵𑌪𑍍𑌨 𑌸𑍁𑌷𑍁𑌪𑍍𑌤𑌿𑌤𑍁𑌰𑍀𑌯 𑌤𑍁𑌰𑍀𑌯𑌾𑌤𑍀𑌤𑌾𑌃 ॥**

ஜாக்ர, ஸ்வப்ந, சுழுப்தி, துரீயம், துரீயாதீதம் எனப் பஞ்சாவஸ்தைகள்.

இதினின்றும் மேல் பாரிபாஷிக அவஸ்தைகள் ஐந்து அறியத்தக்கன; ஜாக்ர, ஸ்வப்ந, சுழுப்தி, துரீய துரீயாதீத பேதத்தால்.

**𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋 𑌜𑍀𑌵𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌾𑌸𑌕𑍍𑌤𑌃 । 𑌪𑌾𑌪𑌫𑌲𑌨𑌰𑌕𑌾𑌦𑌿 𑌮𑌾𑌸𑍍𑌤𑍁. 𑌶𑍁𑌭𑌕𑌰𑍍𑌮𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌤𑌿 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑍇 ॥**

ஜாக்ரத்தில் பிரவிர்த்திக்குஞ் ஜீவன் பிரவிர்த்தி மார்க்கத்தில் ஆசக்தன். பாப பலமான நரகாதி உண்டாகா திருக்குக, சுப கர்ம பலமான சுவர்க்க பல முண்டாகுக என்று இச்சிக்கின்றான்.

அதன் லட்சணமோ, பாப கர்மங்களைவிட்டுச் சுப கர்மங்களை ஆசிரயிக்குக; இங்ஙனம் இருப்பவனே பிரவர்த்த னென்று கூறப்படுகின்றான். அவனே ஜாக்ராவஸ்தை யடைந்தவ னெனப் பெயராம். ஜாக்ராவஸ்தையில் அடைதல்—சம்யுக்த மென்பது பொருளாம். பிரவர்த்திமார்க்க ஆசக்தன் பிரவிர்த்தித்த பாப கர்ம நரகாதி அநுபவம் உண்டாகா திருக்குக, சுபகர்ம பலமான சுவர்க்காதி அநுபவம் உண்டாகுக என்பதாம்.

**𑌸 𑌏𑌵 𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌜𑌨𑍍𑌮𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌬𑌨𑍍𑌧𑌨𑌮𑌿𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌰𑍍𑌗𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥**

அவனே அங்கீகரிக்கப்பட்ட வைராக்யத்தால் கர்ம பல ஜந்மம் வியார்த்தம், சம்சார பந்தநம் வியர்த்தம் என்று முக்தியில் எதிர் முகனாய் நிவிர்த்தி மார்க்கப் பிரவிர்த்தனாகின்றான்.

அவனே கொள்ளப்பட்ட வைராக்கியத்தால் கர்மம் வியர்த்தம், ஜந்மம் வியர்த்தம், சம்சார பந்தநம் வியர்த்த மென்று நித்தியஞ் சிந்தாபரனாய், நல்ல மோக்ஷத்தின் சந்முகன் நிவர்த்தனென்னும் பெயரை யுடையவனாகின்றான்.

[illegible]

ஜாக்ரத்ஸ்வப்ந ஸுஷுப்த்யஹங்காரேண ப்ரஹ்மாஹமஸ்மீதி விஜ்ஞாய நித்யம் ஸர்வம் ஆத்மேதி பாவயந் க்ருதக்ருத்யோ பவதி ||

அவனே சம்சார நிவிர்த்தியின்பொருட்டுக் குருவை யாசிரயித்துக் காமாதிகளை விட்டு, விஹித கர்மங்களை யநுஷ்டித்துச், சாதந சதுஷ்டய சம்பன்னனாய் ஹிருதய கமல மத்தியில், பகவானது சத்தா மாத்ர அந்தர்லட்சிய ரூபத்தை யடைந்து, சுழுப்தி யவஸ்தையில் கூறிய பிரஹ்மாநந்த ஸ்மிருதியைப் பெற்று, நான் ஒருவனே அத்விதீயன், சிலகாலம் அஞ்ஞாந விருத்தியால் ஸ்மரண மின்றிய ஜாக்ர வாசனைகளின் பலத்தால் தைஜசனா யிருக்கின்றேன் எனவும், அவற்றி னிவிர்த்தியால் பிராஞ்ஞனா யிப்பொழு திருக்கின்றேனெனவும், நான் ஒருவனே ஸ்தாந பேதத்தால் அவஸ்தா பேதங்களாம். என்னி னின்று மந்நிய மின்று என்று உத்பந்நமான விவேக முடையவன், சுத்தாத்வைதப் பிரஹ்மமே நான் என்று பேத கந்தத்தை நிவாரணஞ் செய்து, தன்னுள் விசிரிம்பித் திருக்கும், பாநு மண்டலத் தியாந, அதன் ஆகாரத்தால் ஆகாரிக்கும் பரப் பிரஹ்ம ஆகார முக்தி மார்க்க ஆரூடன், பரிபக்குவ னாகின்றான். சங்கல் பாதிகள் மநோ பந்த காரணமாம். அஃ தின்றிய மநம் மோக்ஷத்தின்பொருட் டாகின்றது. அதனை யுடையவன் சக்ஷுராதி பாஹ்யப் பிரபஞ்ச மின்றிச், சர்வப் பிரபஞ்ச கந்தத்தை விட்டு,ஜகத்தை ஆத்ம ரூபத்தால் பார்த்து, அஹங்காரம் விடுபட்டவனாய், பிரஹ்மம் நானா யிருக்கின்றேனென்று சிந்தித்து, இச்சர்வமும் ஆத்மாவே எனப்பாவித்துக், கிருதகிருத்திய னாகின்றான்.

அவனே சம்ஸார சமுத்திரத்தைத் தாண்டும் ஓடத்தை யிச்சிப்பவன், ஜநந மரணப் பிரவாகத்தி னின்றும் தாண்டும் சாதநத்தை யிச்சிப்பவன், பக்தியால் சதா குருசேவை செய்ப வன், காமாதிகளை விட்டு விஹித கர்மங்களை நன்கு ஆசிரயிப்ப வன், மௌநத்தி லிருப்பவன்,சமதமங்களோடு கூடியவன், சுசி யாய் மஹா தைர்ய முடையவன், யோகாப்யாசபரன், மரணம் சமீபிக்கினும் ஸ்வர்க்க சௌக்யத்தை யநுபவிப்பவன், மீண் டுப் பூமியின்கண் வந்து பூர்வ அப்யாசத்திஞல் ஸ்வப்ந அவஸ் தையால் கொள்ளப்பட்ட யோக பலத்தை யுடையவன், ஸ்வப்நத்தின் மிகுதியாகச் சரத் காலத்தி லடைந்த ஸ்வப்நம் போன்று, அநித்திய லோகங்களை அறிந்து, ஹிருதய கமல மத்தியில் பகவானது சத்தா மாத்ரமாகக் கூறிய அந்தர் லட்சிய ரூபத்தை யடைந்து, சுழுப்தி யவஸ்தையில் அநுபவித்த பிரஹ் மாநந்த ஸ்மிருதியைப் பெற்று, நான் ஒருவனே, இரண்டாவ தின்று, சிலகாலம் அஞ்ஞாந விருத்தியால் விஸ்வனு யிருக் கின்றேன், ஜாக்ர வாசனையின் பலத்தால் தைஜசனு யிருக் கின்றேன், அவ்விரண்டன் நிவிர்த்தியால் இப்பொழுது பிராஞ்ஞனுப் இருக்கின்றேன், நான் ஒருவனே ஸ்தாந பேதத் தால் அவஸ்தா பேத முடையவனு யிருக்கின்றேன், என்னி னின்றும் அந்நிய மின்று, சுத்தாத்வைதப் பிரஹ்மமே நான் என்று உத்பந்நமாய விவேக முடையவன், பேத கந்தத்தை நிவிர்த்தித்து, தன்னுள் விசிரிம்பித்திருக்கும் பாநு மண்டலத் தைத் தியாநஞ்செய்து, அதனுகாரத்தால் ஆகாரிக்கும் பரப் பிரஹ்ம மாவேன் என முத்தி மார்க்கத்தை யிங்ஙன மாருட னுயினும், நேத்திர வாயிலாய்க் கொள்ளப்பட்ட பாஹ்ய லட்சண முடையவனுய், தன்னுடைய ஹிருதயத்தின் பிரவிர்த்தியில் ரமிப்பவனுய்ச், சித்திரரூபம் போன்று பிரபஞ்ச கந்த மின்றிச் சர்வ ஜகத்தையும் ஆத்ம ரூபத்தாற் பார்த்து, க்ஷமை, சத்தியம், சௌசாதி யுடைவனு யிருக்கின்றுன்.

**ஸவபுவரிவபூணாபுதுரீயாதீத ஸ ஹஸ்ஸூ**

**தொ யோகீ ஸவதி। தம் ஸ ஹேதி ஸ்தவந்தி।**

ஸவ-ெராக ஸூ-திவா,தூஸஙெஃஸஸஜாா ஶீஜ: ||

சர்வ பரிபூர்ண துரியாதீதப் பிரஹ்ம ரூபமாக யோகி யாகின்றான். அவனைப் பிரஹ்ம மென்று ஸ்துதிக் கின்றனர். சர்வ லோக ஸ்துதி பாத்திரமும், சர்வ தேச சஞ்சார சீலனு மாகின்றான்.

அவனே அகங்காரத்தை விட்டுப் பிராஞ்ஞனை யதிக்கிரமித்த சர்வ பூதோத்பத்தி காரணமான பிரஹ்மம் நான், இது என்னி னின்று முண்டாய், என்னிலே லயமாகின்றது என் னும் விவேகத்தால் எவ னிருக்கின்றான், அவனே பூரிக்கப் பட்ட சமுத்திரத்தில் அமிழ்த்திய கடம் போன்று, நஷ்டமான கடத்தி லிருக்கும் ஆகாசம் போன்று, ஜீவபர ஐக்கியத்தைச் செய்து, சர்வ பரிபூரண துரியாதிதப் பிரஹ்மரூபமாய் யோகியாக விளங்குகின்றான். அவனைப் பிரஹ்ம னென்றும், கோவிந்த னென்றும், பரமசிவ னென்றும் ஸ்துதிக்கின்றனர். சர்வலோக ஸ்துதி பாத்ரமும், சர்வதேச சஞ்சார சீலத்தன்மையுமுடையவ னாய்க் கிருதார்த்த பலத்தால் தத்தாத்திரேயாதிபோன்று விளங் குகின்றான். ஆதலால் சர்வப் பிரயத்நத்தினாலும் யோகாப்பி யாசஞ் செய்க.

வாஜாதூமமெந ஷிநா- நிக்ஷிவ், ஶா-ஜா ெமெஅத ஜாஸ்லவஹஜாஜநஸயொம நிஜூாவஂஜா நநூவஜாநாவூதூா ஜீவநூ-க்ஷா ஹவதி| தவூா நநூலஜாஜூஜமா யொமிெநா ஹவஷீ | தநவெ க்ஷயா ஜஂஜூாநயஸஜாநநா: | ஸாவஂ வூாவூா நநா: வாஜயொமீ ஹவதீத்வா-வநிஷக ||

இதி ஷிதீயஂ ஜாஹணஂ.



பரமாத்ம ரூப ஆகாசத்தில் பிந்துவை நிக்ஷேபித்து சுத்த அத்வைத ஜாட்டிய சஹஜமான அமநஸ்க யோக நித்திரையாய அகண்டாநந்த பத அநுவிர்த்தியால், ஜீவன்முக்த னாகின்றான். அதுவும் ஆநந்த சமுத்ரத்தில் மூழ்கி யிருத்தலின் யோகிகட் குண்டாகின்றது. அத னபேட்சையால் இந்த்ராதிகள் அற்பாநந்த முடையவர்க ளாகின்றனர். இங்ஙன மாநந்தத்தை யடைந்து பரமயோகி யாகின்றான். இஃது உபநிஷத்.

இரண்டாம் பிராஹ்மணம் முற்றுப்பெற்றது.



துரீயாதீதமான ஆநந்தத்தை யங்கீகரித்துச், சர்வாவஸ்தைகளை விட்டுச், சர்வ காரியங்களையும் சந்யாசஞ் செய்து, நன்கு திடயோகத்தில் நிஷ்டை யுடையவன், பரமாத்மாவாகிய ஆகாசத்தில் பிந்துவை நிக்ஷேபித்துச், சுத்தாத்வைத சமரச பாவத்தைச் செய்க என யோக சாஸ்திரத்தில் உபதேசிக்கப்பட்ட அமநஸ்க விதானத்தைச் செய்க.

இங்ஙனம் உந்மநி, மநோந்மநி, சகஜமான அமநஸ்கம், அஜாட்டிய நித்திரை, யோக நித்திரை, அகண்டாநந்த மென்னும் பரியாய பத அநுவிர்த்தியால் ராஜயோகத்திற்கு அறியப்பட்ட நாமங்க ளாகின்றன. இங்ஙனஞ் செய்யப்பட்ட அமநஸ்க சௌக்யம் அபரிமிதம் அத்யந்தம் அக்ஷரமாகின்றது. அந்த ஆநந்த சமுத்திரத்தில் மூழ்கிப் பரமயோகிக ளிருக்கின்றனர். அந்த ஆநந்த அபேட்சையால் சர்வாநந்தமும் அற்பம்போ லாகின்றன. "அஃதொன்றே பிரஹமத்தினாநந்தம்" என்பதாதி சுருதியால், இங்ஙனம் ஆநந்தத்தை யடைந்தவன் பரமயோகியாகின்றான்.

இரண்டாம் பிராஹ்மணம்
முற்றுப்பெற்றது.



## மூன்றாம் பிராஹ்மணம்.

ஓம் || யாஜ்ஞவல்க்யோ மஹாமுநிர்மண்டலபுருஷம் பப்ரச்ச | ஸ்வாமிந்நமநஸ்கலக்ஷணமுக்தமபி விஸ்ம்ருதம் புநரமநஸ்கலக்ஷணம் ப்ரூஹீதி | ததேதி மண்டலபுருஷோऽப்ரவீத் ||

ஓம், யாஞ்ஞவல்கிய மகா முநி மண்டல புருஷனை வினவினர். ஹே சுவாமின்! அமநஸ்க லக்ஷணம் புகன்றதாயினும், (அதனை) மறந்து விட்டேன். மீண்டும் அதன் லட்சணத்தைக் கூறும் என; அங்ஙனமே யென்று மண்டல புருஷர் கூறுகின்றார்.

இங்ஙனம் உபதேசிக்கப்பட்ட பிராகிர்தன், மீண்டு மிதனைக் கூறினான். ஹே! சுவாமின்! அமநஸ்க லட்சணத்தை யிப்பொழுது கேட்டிருப்பினும், மறதி யடைந்தது போன்று தோற்றுகின்றது. அதன் திடத்தின்பொருட்டு மீண்டும் கூற வேண்டு மென்று பிரார்த்திக்கப்பட்ட பரமயோகி, சிஷ்யனைக் குறித்துக் கூறுகின்றார்.

அயமமநஸ்கஸ்த்ரிரஹஸ்யம் யஜ்ஞாநேந க்ருதார்தோ பவதி | தந்நித்யம் சாம்பவீமுத்ராந்விதம் பரமாத்மத்ருஷ்ட்யா தத்ப்ரத்யயரூபாணி த்ருஷ்ட்வா தத்ஸர்வேசமப்ரமேயமஜம் சிவம் பரமாகாசம் நிராலம்பமத்வயம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதீநாமேகலக்ஷ்யம் ஸர்வகாரணம் பரப்ரஹ்மாத்மந்யேவ பச்யமாநோ குஹாவிஹரணமேவ நிச்சயேந ஜ்ஞாத்வா பாவாபாவாதித்வந்த்வாதீதஸ்ஸம்விதிதமநோந்மந்யநுபவஸ்ததநந்தரமகிலேந்த்ரி

𑌯𑌕𑍍𑌷𑌯𑌵𑌶𑌾𑌦𑌮𑌨𑌸𑍍𑌕𑌸𑍁𑌖𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇
𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌯𑍋𑌗𑌰𑍂𑌪𑍇𑌨𑌿𑌵𑌾𑌤𑌸𑍍𑌥𑌿𑌤𑌦𑍀𑌪𑌵𑌦
𑌚𑌲𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 । 𑌤𑌤𑌶𑍍𑌶𑍁𑌷𑍍𑌕
𑌵𑍃𑌕𑍍𑌷𑌵𑌨𑍍 𑌮𑍂𑌰𑍍𑌚𑍍𑌛𑌾𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑍋𑌚𑍍𑌛𑍍𑌵𑌾𑌸𑌾
𑌭𑌾𑌵𑌾𑌨𑍍𑌨𑌷𑍍𑌟𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌃 𑌸𑌦𑌾𑌽𑌚𑌞𑍍𑌚𑌲𑌗𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑌰𑌮𑌶𑌾
𑌨𑍍𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌶𑍂𑌨𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮
𑌨𑌿 𑌲𑍀𑌨𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌪𑌯𑌸𑍍𑌸𑍍𑌰𑌾𑌵𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌧𑍇𑌨𑍁
𑌸𑍍𑌤𑌨𑌕𑍍𑌷𑍀𑌰𑌮𑌿𑌵 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌰𑍍𑌗𑍇 𑌪𑌰𑌿𑌨𑌷𑍍𑌟𑍇
𑌮𑌨𑍋𑌨𑌾𑌶𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌦𑍇𑌵𑌾𑌮𑌨𑌸𑍍𑌕𑌮𑍍 ॥

இந்த அமநஸ்கம் அதி ரஹஸியம். எதன் ஞானத்தால் கிருதார்த்தனாகின்றாய். அது நித்தியம் சாம்பவி மூத்திரையோடு கூடியது. பரமாத்ம திருஷ்டியால் அதன் பிரத்தியய திருஷ்டியை யறிந்து, அதன் பின்னர், சர்வேசனையும், அப்பிரமேய மாயும், அஜ மாயும், சிவமாயும், ப்ரகாசமாயும், ஆலம்பமின்றிய தாயும், அத்வய மாயும், பிரஹ்ம விஷ்ணு ருத்ராதிகளின் ஏகலக்ஷிய மாயும், சர்வ காரண மாயுமுள்ள பரப் பிரஹ்மத்தை ஆத்மாவினிடத்தே பார்ப்பவன், குகை யின்றியதை, இங்ஙனம் நிச்சயத்தா லறிந்து, பாவாபாவாதி த்வந்த்வங்களைத் தாண்டி, அறியப்பட்ட மனோன்மநி அநுபவ முடையவனாய், அதன் பின்னர்ச் சர்வேந்திரிய க்ஷய வசத்தால், அமநஸ்க சுகப் பிரஹ்மானந்த சமுத்திரத்தில் மனத்தின் பிரவாஹ யோக ரூப காற்றின்றிய விட்டிருக்கும் தீபம் போன்று, அசலமான பரப் பிரஹ்மத்தை யடைகின்றான். அதன் பின்னர்க் காய்ந்த விருட்சம் போன்று, மூர்ச்சை நித்திரை ரூப நிஸ்வாச

உஸ்வாச மின்மையின், த்வந்த்வ நஷ்டமாய், சதா
சஞ்சல மின்றிய காத்திர முடையவனாய், பரம சாந்
தியை யங்கீகரித்து மநதின் பிரசார மின்றிய பரமாத்
மாவி னிடத்தில் லீநத்தை யடைகின்றான். பால் சுரந்
ததின் பின்னர்த் தேநு ஸ்தநத்தின் க்ஷீரம் போன்று,
சர்வேந்திரிய வர்க்கம் நஷ்ட மடையுங்கால் மனோ நாச
முண்டாகின்றது. அஃதே அமநஸ்கமாம்.

இப்பொழுது இஃது அத்யந்த ரகஸ்யம்; கேட்பாயாக. இப்
பொழுதே கிருதார்த்தனாவாய். நித்தியம் சாம்பவி முத்திரை
யோடு கூடியவன், முற்புகன்ற பிரகாரத்தால் பரமாத்ம திருஷ்
டியால், பிரத்யயமாய லட்சியங்களை யறிந்து, திருசிய மின்றி,
பூர்வ புண்ணிய தபசினால் பார்க்கப்பட்ட பிரத்யயங்களின்
சூந்யத்தன்மையை யநுபவித்து, சர்வ விடத்தும் ஏகமாயும்,
அப்பிரமேயமாயும், அஜமாயும், சிவமாயும், பராகாசமாயும், நிரா
லம்பமாயும், அத்வயமாயும், ஹரியாயும், அச்சுதமாயும், நித்திய
மாயும், ஆநந்தமயமாயும், சர்வ காரண மாயும் உள்ள பரப்பிரஹ்
மத்தை ஆத்மத்தன்மையானே பார்த்து, மனோ குகை யின்றி
யதை யிங்ஙனம் நிச்சயத்தா லறிந்து, பாவாபாவங்கள் ஸ்வப்ந
அஸ்வப்நங்கள், நித்திரை, அநித்திரைகள் என்பதாதி துவந்
துவ அதீதனாய், அறியப்பட்ட மனோந்மநி அநுபவாநந்தராம்
சர்வேந்திரிய ஜய வசத்தால், அமநஸ்க சுகத்தைப் பிரஹ்மாநந்த
சமுத்திரத்தின்கண் மநப்பிரவாஹ யோக ரூபத்தை யடைந்து,
அதன் பின்னர்க் காற் றின்றியவிடத் திருக்கும் தீபம் போன்று
அசலப் பிரஹ்மத்தை யடைவாய். அதன் பின்னர் நீ காய்ந்த
காஷ்டம் போன்று மூர்ச்சை நித்திரை ரூப நிஸ்வாச உஸ்வாச
மின்மையின், த்வந்த்வம் நாசமாய் சதா சஞ்சல மற்ற காத்ர
முடையவனாய், சாந்தியை யங்கீகரித்து ஸ்திதனாவாய். அப்
பொழுது உனது மநம் பிரசார மின்றிப் பரமாத்மாவினிடத்தில்
லய மடைகின்றது. பால் ஒழுகியதன் பின்னர்த் தேநு ஸ்தந
க்ஷீரம் போன்று சர்வேந்திரிய வர்க்கங்கள் லய மடையில் மனோ
நாசத்தை யங்கீகரிக்க. அஃதே அமநஸ்கமாம்.

𑌤𑌦𑍇𑌵 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌦𑍍𑌧𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌹𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯𑍁𑌪𑌦𑍇𑌶𑍇𑌨 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌹𑌮𑌹𑌮𑍇𑌵 𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌤𑌾𑌰𑌕𑌯𑍋𑌗𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣𑌾𑌖𑌣𑍍𑌡𑌾𑌨𑌨𑍍𑌦𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌪𑌰𑌾𑌕𑌾𑌶𑌮𑌗𑍍𑌨𑌮𑌨𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌸𑍍𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯 𑌵𑌰𑍍𑌗𑍋𑌽𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌾𑌰𑍍𑌜𑌿𑌤𑌪𑍁𑌣𑍍𑌯 𑌪𑍁𑌞𑍍𑌜 𑌪𑌕𑍍𑌵 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌫𑌲𑍋𑌽𑌖𑌣𑍍𑌡𑌾𑌨𑌨𑍍𑌦 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌲𑍇𑌶𑌕𑌶𑍍𑌮𑌲𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿 ॥

அந்த நித்திய சுத்தப் பரமாத்மா நானே யென்று தத்த்வமசி யென்னும் உபதேசத்தால் நீயே நான், நானே நீ யென்னும் தாரகயோக மார்க்கத்தால் அகண்டாநந்த பூர்ணன் கிருதார்த்த னாகின்றான்.

பரிபூர்ண பரமாகாசத்தில் மூழ்கி யிருப்பவர்கள் உந்மநி அவஸ்தையை யடைந்து, சர்வேந்திரிய வர்க்கங்களையும் விட்டு, அநேக ஜந்மங்களில் சம்பாதிக்கப் பட்ட புண்ணிய சமூக பரிபக்குவ கைவல்ய பலமாய அகண்டாநந்த சர்வ கிலேச கல்மஷ மின்றிய பிரஹ்மம் நானே யிருக்கின்றேனென்று கிருதகிருத்தியராகின்றார்கள்.

அந்த நித்யாநந்த சச்சிதாநந்தரூப பரமாத்மா நானே நீ என அங்கீகரிக்கப்பட்ட குருமார்க்கனாகின்றாய், அப்பொழுது நீயே நான், நானே நீ என்று தனது கரத்தைச் சிஷ்யனது சிரசில் வைத்து, நன்குஅறிந்து தத்த்வமசியென்று மூன்று தரம் உபதேசித்துத் தாரகயோக மார்க்கத்தால்பிரஹ்மத்தைப் பார் என்று உபதேசிக்கப்பட்ட பிராகிர்தன் பரமயோகியைக் குறித்து இதைக் கூறுகின்றான்—"நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" "இந்த ஆத்மா பிரஹ்மம்" "எண்மோனு அற்பமு மின்று" என்று இங்ஙனம் உச்சரித்து, அகண்டாநந்த பரிபூரணப்பிரஹ்மத்தைப் பார்த்

றுக், குருவை விளித்து, கிருதார்த்தனு யிருக்கின்றேன், உமது கடாக்ஷத்தால் எனப் புகன்று, அதனுல் பூர்ண ஆகாசத்தில் யத்தனிக்கும் மந முடையவனும்ப் பிரபஞ்சங்களை விட்ட பிராகிர்தன்,உன்மனீ பலத்தை யடைந்து, சர்வேந்திரிய வர்க்கங்களை நிவர்த்தித்துப், பரப்பிரஹ்மத்தி னிடத்தில் குருஉபதேசித்த மனோலயத்தைச் செய்து, அளவுகடந்த ஆநந்த சுகத்தை யநுபவித்து, அநேககாலம் அநேக ஜன்மங்களிலியற்றிய தபோ பலத்தினுல் மோக்ஷத்தை யடைபவ னுகின்றுன்

𑌤𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌹𑌂 𑌨 𑌭𑍇𑌦𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍂𑌰𑍍𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌇𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯 𑌸𑌮𑌾𑌲𑌿𑌙𑍍𑌗𑍍𑌯 𑌶𑌿𑌷𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌮𑌨𑍀𑌨𑌯𑌤𑍍 ॥

𑌇𑌤𑌿 𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌂.

நீயே நான், பேத மின்று, பரமாத்மா, பூரணமாகலின், என்று உச்சரித்து, நன்கு ஆலிங்கனஞ்செய்து சிஷ்யனை ஞப்தியில் அடைவிக்க.

மூன்றும் பிராஹ்மணம் முற்றுப்பெற்றது.



இங்ஙனம் அகண்டாநந்த அநுபவ சர்வக்கிலேச ஆசிரயமின்றியவனைக் குறித்து இது கூறப்படுகின்றது. யோகிராட்-"நீயே நான், பேத மின்று, பரமாத்மா பூர்ணமாகலின் என்று உச்சாரணஞ்செய்து நன்கு ஆலிங்கனஞ்செய்து, சிஷ்யனை ஞப்தியில் அடைவிக்க. பாஹ்யாந்தர துல்யத்தினுல் சுக்ல தேஜோமய சிவத்தை யோக திருஷ்டியால் சதா பார்த்து குணசத்துமம் அநாமமாம்.

மூன்றும் பிராஹ்மணம் முற்றுப்பெற்றது.



நான்காம் பிராஹ்மணம்.

𑌓𑌂 ॥ 𑌅𑌥 𑌹 𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑍋 𑌮𑌣𑍍𑌡𑌲𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛 । 𑌵𑍍𑌯𑍋𑌮𑌪𑌞𑍍𑌚𑌕𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍇𑌣𑌾𑌨𑍁𑌬𑍍𑌰𑍂𑌹𑍀𑌤𑌿 । 𑌸 𑌹𑍋𑌵𑌾𑌚𑌾𑌕𑌾𑌶𑌂

𑌪𑌰𑌾𑌕𑌾𑌶𑌂 𑌮𑌹𑌾𑌕𑌾𑌶𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌂 𑌪𑌰𑌮𑌾𑌕𑌾𑌶𑌮𑌿𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿। 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌮𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌮𑌯𑌮𑌾𑌕𑌾𑌶𑌂, 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍇 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌦𑍃𑌶𑌂 𑌪𑌰𑌾𑌕𑌾𑌶𑌂, 𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍇 𑌅𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌦𑍍𑌯𑍁𑌤𑌿𑌨𑌿𑌭𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌹𑌾𑌕𑌾𑌶𑌂, 𑌸𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑌨𑌿𑌭𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌂, 𑌅𑌨𑌿𑌰𑍍𑌵𑌚𑌨𑍀𑌯𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌂 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌪𑌰𑌮𑌾𑌕𑌾𑌶𑌮𑍍, 𑌏𑌵𑌂 𑌤𑌤𑍍𑌤𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑌣𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍𑌤𑌦𑍍𑌰𑍂𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿।

𑌨𑌵𑌚𑌕𑍍𑌰𑌂 𑌷𑌡𑌾𑌧𑌾𑌰𑌂 𑌤𑍍𑌰𑌿𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍍। 𑌸𑌮𑍍𑌯𑌗𑍇𑌤𑌨𑍍𑌨 𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌸 𑌯𑍋𑌗𑍀 𑌨𑌾𑌮𑌤𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍॥

𑌇𑌤𑌿 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌮𑍍.

ஓம். யாஞ்ஞவல்கியர் மண்டல புருஷனை வினவினர் ஆகாச பஞ்சக லட்சணத்தை விஸ்தாரத்தாற் கூறுமென. அவர் ஆகாசம், பராகாசம், மஹாகாசம், சூர்யாகாசம், பரமாகாசம் என்று ஐந் தாகின்றன எனக் கூறினர். பாஹ்யாந்தர அந்தகார மயம் ஆகாசமாம். பாஹ்யாந்தரங்களில் காலாக்னி சதிர்சம் பராகாசமாம். பாஹ்யாந்தரங்களில் அபரிமித பிரகாச சாமன தத்துவம் மஹாகாசமாம். பாஹ்யாந்தரங்களில் சூர்யசதிர்சம் சூரியாகாசமாம். அநிர்வசநீய ஜோதி சர்வ வியாபக நிரதிசயானந்த லட்சணம் பரமாகாசமாம். இங்ஙனம் அந்தந்த லட்சியத்தைப் பார்த்தலால் அவ்வச் சொரூபமாகின்றான்.

நவச்சக்ரம், சடாதாரம், திரி லட்சியம், வியோம பஞ்சகமாய இவற்றை நன்கு அறியாவிடின் அவன்

பெயர் மாத்திரையானே யோகியாகின்றான்.

நான்காம் பிராஹ்மணம் முற்றிற்று.



இங்ஙனம் பிரஹ்மாநந்தம் அறியப்படினும் சிஷ்யனை உபாதியாகக் கொண்டு லோக அநுக்கிரகத்தின் பொருட்டு யோகிராட் இதனைக் கூறுகின்றனர்.

ஹே சிஷ்ய சிரேஷ்ட! சாவதானமாகக் கேட்பாயாக. அதனால் உனக்குக் கர்மம் அற்பமாயினும் துக்கத்தைச் செய்வதாகின்றது. நைஷ்கர்ம்யம் சுகத்தைக் கொடுப்பது என்பது அர்த்தத்தாற் சித்திக்கின்றது. திடதர யோகாப்யாசத்தால் அக்கர்மம், ஓடத்திலிருக்கும் வழிப்போக்கனைப் போன்று அஷ்டாங்கம் நிவிருத்தமாகின்றது. இதனால் யோகத்தை யிச்சிப்பவன் தைர்யமாக சர்வத்தையும் அதிக்கிரமித் திருக்கும்பிரஹ்மத்தைத் தியானஞ் செய்க. அப்யாசத்தால் சகுணம் அல்லது நிஷ்களம்உண்டாகுமாயின், அதனால் கர்மத் தியாகம்ஆவசியகம்; ஆந்தர பாஹ்யங்கள் ஏகீகரணப் பிரவிர்த்தியாகிய அதன் பிரயோஜன மின்மையின், கர்மங்கள் அநந்த அநந்த ஜந்மங்களைக் கொடுப்பன. இப்பொழுது அவ்வஜ் ஜந்ம சஞ்சிதாதி பேதத்தால் அதிதிடங்கள் பரித்தியாகஞ் செய்தற்கு அதிதிட ஆஸ்பதமான குணயோகத்தால் அநுசிதங்கவான நமது அதிகல்பனை பிராப்தமாகுமாயின், அஃது ஆயாச மின்றியே உண்டாகின்றது. கலைகளின்றிய ராத்ரியில், அத்தியந்த காட அந்தகாரத்தில் ஜகத் வியாபித் திருப்பினும், ஆதித்ய உதயத்தால் சர்வ பதார்த்தங்களும், அவற்றின் காரணங்களும் எஞ்சாது தோற்றுகின்றன.

இங்ஙனம் யோகாப்யாசத்தானே மார்த்தாண்ட உதயத்தில் பிண்டாண்டங்க ளறியப்படின், சிருஷ்டியாதி ஜந்மாந்தர சர்வ கர்ம நாச முண்டாகின்றது. ஆகலின், நிஷ்கிரியனாகிய பரம யோகி பிரகிருதி பந்தத்தினின்றும் விடுபட்டுச் சுகியாகின்றான்.

நான்காம் பிராஹ்மணம் முற்றிற்று.



## ஐந்தாம் பிராஹ்மணம்.

𑍐 ॥ 𑌸𑌵𑌿𑌷𑌯𑌂 𑌮𑌨𑍋 𑌬𑌨𑍍𑌧𑌾𑌯 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌂 𑌮𑍁𑌕𑍍𑌤𑌯𑍇 𑌭𑌵𑌤𑌿 । 𑌅𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌜𑌗𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌗𑍋𑌚𑌰𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌯𑌂 𑌮𑌨𑍋𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌰𑌿𑌪𑌕𑍍𑌵𑌂 𑌲𑌯𑌯𑍋𑌗𑍍𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌲𑍍𑌲𑌯𑌂 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌮𑌭𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 ॥

ஓம். சவிஷய மநம் பந்தத்தின்பொருட்டு, நிர்விஷயம் மோக்ஷத்தின்பொருட் டாகின்றது. இதனால் சர்வ ஜகத்தும் சித்த கோசரம். அந்தச் சித்தமே ஆசிரய மின்றி மந உந்மநி அவஸ்தா பரிபக்குவ லய யோக்ய மாகின்றது. அந்த லயத்தைப் பரிபூர்ணமான என்னிடத்தில் நன்கு அப்யசிக்க.

சவிஷய சித்தமே பந்தத்தின் பொருட்டு; நிர்விஷயம் முக்தியின் பொருட்டாகின்றது. இதனால் சர்வ ஜகத்தும் சித்த கோசரம். அந்தச் சித்தமே ஆசிரய மின்றி மந உந்மநியவஸ்தா பரிபக்குவ மனோ லய யோகத்தைச் சம்பாதித்து, அந்த மனோ லயத்தைப் பகவதியாய பூர்ணத்தில் நன்கு அப்யசிக்க.

𑌮𑌨𑍋𑌲𑌯𑌕𑌾𑌰𑌣𑌮𑌹𑌮𑍇𑌵 ।

𑌅𑌨𑌾𑌹𑌤𑌸𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌯 𑌯𑍋 𑌧𑍍𑌵𑌨𑌿𑌃 । 𑌧𑍍𑌵𑌨𑍇𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑌂 𑌮𑌨𑌃 ॥

𑌯𑌨𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌜𑌗𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌵𑍍𑌯𑌸𑌨𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑍍 । 𑌤𑌨𑍍𑌮𑌨𑍋 𑌵𑌿𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

மனோ லய காரணம் நானே. உத்பந்நமாகாத சப்தம், அச்சப்தத்தின் த்வநி, அத் த்வநியின் உள்ளி

ருக்கும் ஜோதி. ஜோதியினுள் ளிருக்கும் மநம், எந்த மநம் திரிஜகத்தில் சிருஷ்டி, ஸ்திதி, சம்மார கர்மங் களைச் செய்கின்றது, அம்மனே லயம் விஷ்ணுவின் பரம பதத்தை யடைகின்றது.

மனே லய காரணம் விஷ்ணுவால் உத்தர கீதையில் கூறப் பட்டிருக்கின்றது.

**தஸ்யாந்தர்மனஸோ லயஸ்ஸம்ஹாரவாச் ।**
**மனஸ்ஸைவ பரசேதஸ்ஸு தஜ்ஞாத்வா வாமனோ**
**தத்வமாத்மஜ்ஞாநவர்த்ஸ்ய யோகாஸ்வமேர் ॥**

அதன் லயத்தால் சுத்த அத்வைத சித்தி; பேத மின்மையின். அதுவே பரம தத்துவம். அதனை யறிந்த வன், பால, உன்மத்த, பிசாசு போன்று ஜட விருத்தியால் லோகத்தை யாசிரயிக்க.

அந்த மனே லயத்தின் பின்னர்ச் சுத்த அத்வைத சித்தி யுண்டாகின்றது; அப்பொழுது பேத கந்த மின்மையின். இது பரம தத்துவம், ரகஸ்யம், பரமயோகி செய்தற்குப் பால உன்மத்த பிசாசு போன்று சொரூபத்தை ஜட விருத்தியால் நன்கு மறைத் திருக்கின்றான். பூர்வ யுக காலத்தில் ஜநித்த, ரிபு, நிதாக, ஜடபரத, தத்தாத்ரேய, ரைவதாதிகள் வியக்த மின்றிய லிங்க முடையவர்களாய், அவ்யக்த ஆசாரத்தோடு உன்மத்தன் போன்று சஞ்சரிக்கின்றனர் என்னுஞ்சுருதியால், நிஃரேயச பலலாபத்தை யடையும் யோக்கியனுய யோகி நிந்திக்கத் தக்க ராகாதிகளினின் றும் நிவிர்த்தியான பிரகிருதி யுடையவனுயினும், அநேக அநாதி பிரகிருதியினுற் கட்டுப்பட்டவன் போன்று பார்க்கப்படு கின்றான். அதனுல் சர்வ யோகி சிரேஷ்டன் அமநஸ்க யோகி யென்பது சித்தாந்தமாம்.

**ஸவஸ்ஸநக்ஷஸ்ராஹ்ரா வெஸமௌநவ நிதர்தர்த்ர**
**ஞ்ஞுஉவு த்ருவ ஸீஷசிதஹோஜநத்ர ஜ்ஞாஜ்ஞாஜ்ஞா**

[illegible]

இங்ஙனம் அமநஸ்க யோக அப்யாசத்தானே நித்ய திருப்தி, அல்ப மூத்திர, மல, மித போஜந, திட அங்க, அஜாட்டிய நித்ரை, குறுக்காகச் செல்லும் வாயுச் சலந மின்மைப் பிரஹ்ம தரிசநம், அறியப்பட்ட சுக சொரூப சித்தி யாகின்றது.

அவ்வித யோகிக்கு எண்ணெய் தேய்த்தல், நெய் குடித்தல் முதலிய வேர்வை நிவிர்த்தியின் பொருட்டுப் பரிகாரஞ் செய்ய த்தக்க தன்றும். அமநஸ்க அப்யாசத்தானே சுகுமாரர் முதலியோரது தேக பல சித்தி லாபத்தால் அமநஸ்க அப்சாயத்தானே திவ்ய ஔஷத மாகின்றது. அதனால் சர்வ சித்தியும், ராஜ யோக சித்தியும், நித்ய திருப்தியும், அல்ப மூத்ர மல விசர்ஜநமும், மித போஜநமும், திட அங்கத்தன்மையும், அஜாட்டியத்தன்மையும் நித்திரை யின்மை முதலிய சுப பலங்க ளுண்டாகின்றன. குறுக்காக வாயுச் சலந மின்மையானும், அதனால் நிரந்தரம் பிரஹ்ம தர்சநத்தா லுண்டான அற்புத சுகத்தை யடைந்து, ஒன்றி னின்றும் பயப்படுவ தின்று.

ஆகலின் சித்தாதி ஆசநங்களினின்றும் தமது மூலாதி பந்தங்களால் பிராணவாயு நிரோதத்தால் விஷயேந்திரிய நிக்ரகதியாக திருக் திருசிய விவேகத்தானும் இந்த நியமங்களி னின்று மதிக்கிரமித்த சுத்தாத்துவிதமார்க்கத்தை யவலம் பிப்பவன், பரமயோகியாயும், சதா ஆநந்தமுடையவனாயும் சர்வ சித்தியும் அடையத் தக்கவனாயு மிருந்து, அமநஸ்க விதாநத்தால் ஒவ்வொரு திநம் அல்லது க்ஷணமாத்ரம் காலக்ஷேபத்தின்பொருட்டு அநுபவத்தை யடைகின்றான்.

[illegible]

ஜகத்பவித்ரம் பவதி । தத்ஸேவாபரோऽஜ்ஞோऽபி முக்தோ பவதி । தத்குலமேகோத்தரஶதம் தாரயதி । தன்மாத்ருபித்ருஜாயாபத்யவர்கம் ச முக்தம் பவதி ॥ இத்யுபநிஷத் ॥

பூர்ணமத இதி ஶாந்தி:.

இதி பஞ்சமம் ப்ராஹ்மணம்.

மண்டலப்ராஹ்மணோபநிஷத் ஸமாப்தா.



இங்ஙனம் அநேக கால சமாதியினால் உத்பந்நமான பிரஹ்மாமிர்த பாந பராயணனான இவன் சந்நியாசி, பரமஹம்சன், அவதூதனாகின்றான். அவன் தரிசநத்தினால் சகல ஜகத்தும் பவித்திர மாகின்றது; அவனின் சேவாபரன் அஞ்ஞனாயினும் முத்தனாகின்றான். அவன் 101 - குலத்தைச் சம்சார பந்தத்தினின்றும், தாண்டச் செய்கின்றான். அவன் மாதா - பிதா - ஸ்திரீகளும், அவர்களினின்று முண்டான வர்க்கங்களும் மோக்ஷத்தை யடைகின்றனர். இஃது உபநிஷத்.

ஐந்தாம் பிராஹ்மணம் முற்றுப் பெற்றது.

மண்டலப் பிராஹ்மணோபநிஷத்

சமாப்தம்.



அவனே அநேக காலஞ் சமாதியினின்று முண்டான பிரஹ்மாமிர்த பாந பராயணனாகின்றான். "எதுவரை மோக்ஷமடைய வில்லை அவனுக்கு அவ்வளவே சிரமகாலம்" என்னும் சுருதியால் அவ்வித பரமயோகி,அவனே பரமஹம்சன்,அவனே அவதூதனுமாம்.அவன் திருஷ்டியால் சகல ஜகத்தும் பவித்திர

மாகின்றது. அவனைச் சேவை செய்பவன் அஞ்ஞனாயினும் மோக்ஷ மடைந்தவனே யாகின்றான். அவன் முன்னும் பின்னும் 21 எண்ணிக்கை யுடைய குலத்தை மோக்ஷத்தி லடைவிக்கின்றான். அவன் மாதா, மோக்ஷ மடைந்தவள் பலத்தாலும், பாவத்தாலும் கிருதார்த்தமானவள். பிதா தனது பூர்வாபர அநேகப் பிதிர்க் கணங்களோடு முத்தனாகின்றான். இது யோகியின் சிரேஷ்டமான மகத்துவ மென விஸ்தரிக்கப்பட்டது.

நாரதாதி எல்லோரும் ராஜ யோக அப்யாசத்தால் ஜரா மரண மின்றியவர்களாய், நித்யாநந்த வைபவர்களா யிருக்கின்றனர். அங்கே இப்பொழுதும் ஊகிக்கத்தக்கது. அந்நியர்களோ, தாபத்திரயம், ஷட்கோசம், ஷடுர்மி, பஞ்சகோசம், ஷட்பாவ விகாரம், ஷடரி, ஷட் பிராந்தியோடு கூடியவர்களாகின்றனர்.

தாபத் திரயமோ, ஆத்யாத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக மென்னும் பெய ருடையதாம். கர்த்ரு கர்ம காரிய, ஞாதுரு ஞாந ஞேய, போத்ரு போக்ய போகங்க ளென ஒன்பதுவித வியவகாரங்கள் அறியத்தக்கன. த்வக், மாம்ச, சோணித, ஹஸ்தி, ஸ்நாயு, மச்சைகள் ஷட் கோசங்க ளாகின்றன. காமக் குரோத, லோப, மத, மாச்சரியங்கள் ஷடரிக (6 சத்துருக்க) ளாம். அந்நமய, பிராணமய, மநோமய, விஞ்ஞாநமய, ஆநந்த மயங்க ளெனப் பஞ்ச கோசங்களாம். பிரியத்வம், ஜநநம், விருத்தி, பரிணாமம், அபக்ஷயம், விநாசங்கள், சட்பாவ விகாரங்களாம். பசி, தாக, சோக, மோக, ஜரா, மரணங்கள், சடூர்மிகளாம். குல, கோத்ர, ஜாதி, நாம, வர்ண, ஆஸ்ரம ரூபங்கள் ஷட் பிரமங்க ளாகின்றன.

இவற்றை யடைந்தவர்கள் மீண்டு மீண்டும் யமன் வசத்தை யடைந்த நித்ய சம்சாரிகள் என வியாக்யாநஞ் செய்யப்பட்டதாகின்றது. ஆகலின் சம்சாரத்தினின்றும் வைராக்யத்தை யடைந்த பரம யோகி, பிரஹ்ம மார்க்கத்தை யவலம்பித்து மூலாதாரத்திலிருக்கும் குண்டலினியால் இடைபிங்கலையால் சஞ்சரிக்க விகலமான வாயுவை வேறு கிரமத்தினால் சுழுமுனைத் துவாரத்

தை யடைந்து, இங்ஙனம் விஸ்தரித்துக் கூறப்பட்ட மார்க்கத்தில் பிரஹ்ம,. விஷ்ணு, ருத்ராதி கிரந்தி பேத பூர்வகம் ஆக்ஞா ரூப அல்பத்தை நிவிர்த்தித்துத், தாரக அநுசந்தாநத்தால் தாரகத்தில் அரைப்பிம்பத்தோடு கூடிய மத்திய மார்க்கத்திஞல், அற்களை யின்றி விசிரிம்பிக்கும் அக்நி,சூர்ய, தேஜசின் சமூக பவாநங்களால் திறக்கப்பட்டுத் தளதளப்பான தேஜசு ரூபமாய் அதின் சமீபத்தில் விஶ்வ, வியோம, வியாப்தி,பரிபூரண சந்திர மண்டலத்தி லிருக்கும்,சாந்திராமிர்தத்தை யடைந்து, பிந்துவின் சமூக பாநத்திஞல் திருப்தி யடைந்தவன், சதாநந்த ரூபத்தைச் சிரேஷ்டமாக அடைந்து, சம்சய மின்றிய தத்துவாகாசமாய், சதாநந்த அவதூத கிருபா லேசத்தால் முத்தஞ யிருக்கின்றேனென்று பாவிக்க.

ஐந்தாம் பிராஹ்மணம் முற்றுப்பெற்றது.

மண்டலப் பிராஹ்மணோப நிஷத்தின்
ராஜயோக பாஷ்யம் முற்றுப்பெற்றது.



# லோகோபகாரி ஆபீஸ்-சென்னை.

## சம்ஸ்கிருத மொழிபெயர்ப்புப் புத்தகங்கள்.

## இதுகாறும் தமிழில் வராதன.

### வியாச தாத்பர்ய நிர்ணயம்.

சம்ஸ்கிருதத்தில் அய்யண்ண தீக்ஷிதரென்னும் பெரிய வித்வானால் வசநவடிமாக இயற்றப்பட்டுள்ளது. அதன் முதற் பரிச்சேதத்தில் சகல வாதிகளையும் பக்ஷபாத மின்றி வாதிப் பிரதிவாதி மத்யஸ்த பூர்வகம் கண்டித்து வியாஸ பகவானது தாத்பர்யம் அத்வைதமே என ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது; இரண்டாம் பரிச்சேதத்தில் பிரஹ்மப் பிராப்தி அமூர்த்த ரூப சகுணப் பிரஹ்மத்தானேயே ஆகும் என மற்றையோர்களைக் கண்டித்து நன்கு ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. இது கோவிலூர் ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளால் தமிழில் வசந வடிவமாக மொழிபெயர்க்கப்பட் டிருக்கின்றது. வேதாந்திக ளெல்லோரும் பிறமதஸ்தரைக் கண்டித்தற்கு இப்புத்தகம் மறந்துங் கைவிடாது வைத்தற் குரியதாம். **விலை அணா எட்டு.**

### நைஷ்கர்ம்ய சித்தி.

இது சர்வ தர்சனங்களுக்கும் வியாக்யானஞ் செய்த சுரேஸ்வராச்சாரியா ரவர்களால் இயற்றப்பட்டது. இந்நூலில் மோட்சத்திற்குக் கர்மம் சாதநம் அல்ல வென்று நான்கு அத்தியாயங்களால் கத்திய பத்திய வடிவமாக நன்கு நிரூபிக்கப் பட்டிருக்கின்றது. இக்கிரந்தந்தான் சம்ஸ்கிருதத்திலுள்ள பஞ்ச சித்திகளுள் (நைஷ்கர்ம்ய சித்தி, இஷ்டசித்தி, அத்வைதப் பிரஹ்ம சித்தி, அத்வைத சித்தி, சுவாராஜ்ய சித்தி) முதன் முதல் செய்ததாம். இது சம்ஸ்கிருதத்தில் மிகு பிரசித்தமும் கம்பீரமுமா யிருப்பதை நோக்கித் தமிழ் மக்கட் குபயோகமா மாறு ஸ்ரீ கோவிலூர்-காசிகாநந்த சுவாமிகளால் வசந வடிவமாக மொழிபெயர்க்கப்பட் டிருக்கின்றது. இதுகாறும் தமிழில் வெளிவந்திருக்கும் விசாரசாகர முதலிய லட்சண கிரந்தங்கட் கெல்லாம் இதுவே மூலமாம். **விலை அணா எட்டு.**

(சுக்ல யஜுர்வேதத்திலுள்ள)

## மண்டலப் பிராஹ்மணோப நிஷத்தும் ராஜயோக பாஷ்யமும் - விலை அணா நான்கு.

இதன் கண் ஐந்து பிராஹ்மணங்க ளிருக்கின்றன; ராஜ யோக சம்பந்தமான விஷயங்கள் மிகத் தெளிவாகக் கூறியிருக் கின்றமை நோக்கி ஸ்ரீ சதாநந்த அவதூதரால் இதற்கு அதி லலிதமான பாஷ்யம் ஒன்றியற்றப்பட் டிருக்கின்றது. இதன் கண் ராஜயோக தத்துவங்களோடு வேதாந்த தத்துவங்களும் அதி வெளிப்படையாக விளக்கப்பட் டிருக்கின்றன. இத னருமையை நோக்கித் தமிழ்மக்கள் யோக தத்துவத்தை அநா யாசமாக உணருமாறு மண்டலப் பிராஹ்மணோப நிஷதமும், அதன் வியாக்கியானமாய ராஜயோக பாஷ்யமும் செவ்விய வசநவடிவமாக ஸ்ரீ கோவிலூர் - காசிகாநந்த சுவாமிகளவர்க ளால் மொழிபெயர்க்கப்பட் டிருக்கின்றன. யோகாப்பியாசி கட்கு இந்நூல்போல் எந்நூலும் பயன்தராதென்பதுஒருதலையே.

## வேதாந்த சித்தாந்த முக்தாவலி.

இது சம்ஸ்கிருதத்தில் பிரகாசாநந்த சுவாமிகளாலியற்றப் பட்டது. இதில் நாநாஜீவவாதத்தையும் ஏகஜீவவாதத்தையும் சுருதி யுக்திப்பிரமாணங்களோடு நன்கு நிரூபித்து, நாநாஜீவ வாதத்தைப் பூர்வபக்ஷஞ் செய்து ஏகஜீவவாதத்தைச் சித்தாந்தஞ் செய்திருக்கின்றார். ஏனைய நூல்களில் அநேக விஷயங்க ளோடுகூட ஏகஜீவவாதமும் நாநாஜீவவாதமும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூல் நாநாஜீவவாதத்தையும் ஏகஜீவவாதத் தையுமே தெளிவாகப்போதிப்பதால் இஃது அவ்விரண்டு மதங் களையு மறிவதற்கு மிகவும் உபயோக முடையதாம். சம்ஸ்கிரு தத்தில் அருமையும், பிரசித்தியும் பெற்றுள்ள இந்நூல் தமிழ் மக்கட் குபயோகமாமாறு தமிழில் வசந வடிவமாக கோவிலூர் மடாலயம் - ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளால் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றது. **விலை அணா எட்டு.**

## வேதாந்த டிண்டிமம்.

### (வேதாந்தப் பேரிகை.)

இது சம்ஸ்கிருதத்தி லிருந்து கோவிலூர் - ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால் மூலஞ் செய்யுள் வடிவமாயும் அதை விளக்கத் தெளிவான உரையு மியற்றப்பட் டிருக்கின்றது. இதுபோன்ற வேதாந்த நூற்கள் தமிழில் மிகக் குறைவே. ஆகலின் இது வேதாந்த அப்பியாசிகள் ஒவ்வொருவரிடத்தும் அவசிய மிருத் தற்குரியதாம். விலை அணு நான்கு.

## வேதாந்த சாரமிருதமும்

## அத்துவித ரசமஞ்சரி மூலமும்-உரையும். விலை அணு ஆறு.

(1) **வேதாந்த சாராமிருதம்:**—சதாநந்த பரிவிராஜகாச் சாரியாரால் சம்ஸ்கிருதத்தி லியற்றப்பட்டுள்ளது; வேதாந்தங் கற்க விரும்புவோர்கட்கு ஒரு திறவுகோல் போல்வது. இதில் சாதனப் பிரகரணம், அத்தியாரோபப் பிரகரணம், மகாவாக்கி யப் பிரகரணம், சிரவணுதிப் பிரகரணம், ஜீவன் முத்திப் பிரகா ணம் என்னும் 7 பிரகரணங்கள் சுருக்கமாகவும், விளக்கமாகவும் செவ்விய வசன நடையில் கோவிலூர் - ஸ்ரீ சுப்பய்ய **சுவாமிக ளவர்களால்** தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இது வெளிவந்திருக்கும் கட்டளைகட் யெல்லாம் மூலமானதென்பது பிரசித்தமாம். (2) **அத்துவித ரசமஞ்சரி:**—இதில் சதாசிவப் பிரஹ்மேந்திரர் சரித்திரமும், அவரருளிச் செய்த சுலோகம் கிரந்தத்திலும், ஸ்ரீ கோவிலூர் நித்தியானந்த சுவாமிகள் திரு வாய்மலர்ந்தருளிய தமிழ் மூலமும் - உரையும் அடங்கியிருக் கின்றன. இஃது இதுகாறும் கிரந்தத்திலாவது தேவநாகரத்தி லாவது, தமிழிலாவது வெளியாகவில்லை.

## ஸ்ரீமத் பாகவதம் சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.

**தசமஸ் கந்தம்.**—கிருஷ்ண லீலைகளை மிகுதியாகக் காட் டுவது, சித்திரப் படங்களோடு கூடியது. விலை ரூபாய் ஆறு.

1 - 2 - 3 - 4, ஸ்கந்தங்கள் அடங்கிய ஸ்ரீமத் பாகவதம். தனிக்கட்டடம் - விலை ரூபாய் ஆறு.

## சர்வதர்சன சங்கிரகம்.

*இது ஸ்ரீ சங்கரபீடத் தாசிரியரா லெழுந்தருளி யிருந்த ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளாலருளிச் செய்யப்பட்டது. இதில் லோகாயதமுதல் வேதாந்தமீறாக 16 - மத சித்தாந்தங்களடங்கி யிருக்கின்றன.* விலை ரூபா 2-8-0

## அத்வைதார்த்தப் பிரகாசிகை என்னும்

**சங்கரத் துவேஷியாரின் வாய்ப்பூட்டு - விலை அணா ஆறு.**

*இப்புஸ்தகத்தில் வேதாந்த ஆசாரியராய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளை ஈஸ்வராவதார மென்றும், அத்வைதமே அடையத் தகுந்த தென்றும், அநேக பிரமாண யுக்தியோடு கோவிலூர் -* **ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால்** *வசன வடிவமாக எழுதப்பட்டிருக் கின்றது. இப்புத்தகத்தைப் படிப்பவருக்கு சைவ சித்தாந்திகள் ஒரு வாற்றானும் வேதாந்திகளை நிந்தித்தற்கு நியாயமில்லை என் பதும், அவர்கள் வாயைப் பூட்டப்பட்டிருக்கின்ற தென்பதும் நன்கு விளங்கும்.*

## வேதாந்தசாஸ்திர ரத்நாவலி.

**பாக்கெட் சைஸ் - ரூபாய் ஒன்று.**

*இதில் நாநாஜீவவாதக் கட்டளை, கீதாசாரத் தாலாட்டு, சசிவன்னபோதம், மஹாராஜா துறவு, வைராக்ய சதகம், வைராக்கிய தீபம், இலக்ஷண விர்த்தி, வேதாந்த சூடாமணி, கைவல்லியம் நவநீதம் ஆக ஒன்பது புத்தகங்களடங்கி யிருக்கின் றன. இது ராயல் 32-பேஜில் 50-பவுண்டு கிளேஸ் கடிதத்தி லச்சிடப்பட்டு இதுகாறும் வெளிவராத 2 மஹான்களினது படத்துடன் காலிகோ பயிண்டு செய்யப்பட்டிருக்கின்றது.*

## கைவல்யம் — மூலம்.

*இது யாவருக்கும் மநநத்திற் குபயோகமாமாறு மூலபாட மாத்திரம் பாக்கெட் சைசில் (ராயல் 32-பேஜில்) அச்சிடப்பட் டிருக்கின்றது. ஒவ்வொரு வேதாந்தியினிடத்தும் அவசிய மிருத்தற்குரியது.* விலை அணா மூன்று.

## பஞ்சதசி.

இது ஸ்ரீ சங்கராபீடத் தாசிரியரா யெழுந்தருளி யிருந்த ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் முமுக்ஷுக்களுக்கு மிகுதியும் உபயோகமாமாறு கருணையோடு பதினைந்து பிரகரணமாகத் தேவவாணியிற் றிருவாய்மலர்ந்தருளினார். அது தமிழ் மக்கட்குப் பயன்படாமை கருதி கோவிலூர்-ஸ்ரீ நித்தியாநந்த சுவாமிகளால் முன் பத்துப் பிரகரணமும், கோவிலூர் - ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால் பின்னைந்து பிரகரணமும் தமிழில் அரிய செய்யுள் வடிவமாக மொழி பெயர்க்கப்பட்டு 32-பேஜ் பாக்கெட் சைசில் அச்சிடப்பட்டிருக்கின்றது. இஃது ஒவ்வொரு வேதாந்திகளிடத்தும் மனனஞ் செய்வதற்கு அத்தியாவசியக மிருக்க வேண்டியதாம். **விலை அணா பத்து.**

## வேதாந்த சித்தாந்த சாரசங்கிரகம்.

இது ஸ்ரீ சங்கராச்சாரியாரவர்களால் திருவாய் மலர்ந்தருளப்பட்டது; ஆத்மானாத்ம விசாரஞ் செய்பவருக்குப் பரமசாதனமாயுள்ளது; இதுகாறும் தமிழில் வாராதது; வசன நடையிலிருப்பது. விலை அணா 8,

**ராமோதந்தம்:**—சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு. ராமாயணத்தைத் தொடர்பாகவும், சுருக்கமாகவும், விளக்கமாகவும் தெரிவிப்பது. பாலர்களுக்கும் பாலிகைகளுக்கும் மிகவும் உபயோகமானது. விலை அணா இரண்டே.

## மெய்ஞ்ஞான போதம் - விலை அணா பன்னிரண்டு.

இது சென்னை, கோமளேசுவரன் பேட்டையில், சோமவாரந் தோறும் பிரசுரமாகும் **லோகோபகாரி** பத்திரிகையின், (1911-வது வருடத்து) முதற்பக்கத்தில் வெளிவந்த வேதாந்த விஷயங்கள் அடங்கிய புத்தகம்; இதில் உபசாந்தத்திற் கேதுவான ஆத்மாநாத்ம விவேகத்தை யுண்டாக்குவதற்குப் பரமசாதனமாக 51-வேதாந்த உபந்நியாசங்க ளடங்கியுள்ளன.

## சிவப்பிரகாசப் பெருந்திரட்டு.

### (குறுந்திரட்டுடன்). விலை ரூபாய் மூன்று.

இது சொரூபாநந்தரால் திரட்டப்பட்டது. இதுகாறும் வெளிவாராதது; சாஸ்திர ரூபமாயுள்ளது. இதில் 224-அதிகாரங்களிருக்கின்றன. முமுட்சுக்களுக்கே யன்றி, மதங்களின் சொரூபங்களையும் அவற்றின் பேதங்களையும் அறிய விருப்பமுடையாருக்கும், உபந்நியாசகர்கட்கு மிந்நூல் பெருங் கருவியாயுள்ளது. இதில் 2821 - செய்யுட்களிருக்கின்றன; பெருந்திரட்டிலில்லாத குறுந் திரட்டின் 424-செய்யுட்களு மிருக்கின்றன. இது டிம்மி 8-பக்கங்கொண்ட 80-பாரா அளவுள்ளது.

## வேதாந்த சூடாமணி-மூலம்.

இது யாவருக்கும் மநநத்திற் குபயோகமாமாறு மூலபாட மாத்திரம் பாக்கட்சைசில் (ராயல் 32 - பேஜில்) அச்சிடப்பட்டிருக்கின்றது ;வேதாந்த வித்துக்களிடம் அவசியம் இருக்கத் தக்கது. விலை அணா 2 - 6.

## பக்தமாலா வசனம்.

இது, ஸ்ரீ மஹீபதிபாவா என்னும் பக்த சிரேஷ்டர் மகாராஷ்டிர பாஷையிலியற்றிய வடதேசத்துப் பக்த சரித்திரங்களடங்கிய சந்த விஜயம், சந்தலீலாமிருத மென்னும் கிரந்தங்களுக் கிணங்கத் தமிழ்ப் பாஷையில்ஸ்ரீ சாது வே.பாலகிருஷ்ண முதலியாரவர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதில் தென்னிந்தியாவில் வழங்கிவரும் சில பக்தர்களின் சரித்திரங்களும் சேர்க்கப்பட்டு 183-பக்தர்களின் சரித்திரங்களடங்கியிருக்கின்றன. இது மகாராஷ்டிர பாஷையிலுள்ள கிரந்தங்களின் நேர்மொழிபெயர்ப்பாகலின், இப்போது வெளிவந்திருக்கும் பக்தர்களின் சரித்திரங்களிலும் சிலாக்கியமானதாம். இது டிம்மி 8-பக்க அளவில் 743 - பக்கங் கொண்டது. கலிகோ பைண்டு ரூபாய் 3 - 8 - 0.

## திருமூலர் திருமந்திரம்.

### (குறிப்புரையுடன்)

இது பல ஏட்டுப் பிரதிகளைக் கொண்டு பல வித்வான்கள் மூன்றிலையில் பரிசோதிக்கப் பெற்று சுத்தப் பாடமாக அச்சியற்றப்பெற்றுள்ளது; பிரஹ்மஸ்ரீ திரு. அ. சிவானந்தசாகர யோகீசுவரர்கள் முதலிய தத்துவ வித்துக்களால் குறிப்புரை யெழுதப்பெற்றுள்ளது; டிம்மி 8-பக்கமுள்ள 90 - பார அளவினது. திருமூல நாயனார் படத்துடன் கூடியது; காலிகோ பைண்ட் செய்யப்பட்டுள்ளது. விலை ரூபாய் 3 - 8 - 0

## ஆநந்தராமாயணம்.

இதுகாறும் தமிழில் வாராதது; இது வால்மீகி மகரிஷியால் வடமொழியிலியற்றப்பட்டது. இதில் வால்மீகி ராமாயணத்திலில்லாத அநேகவிஷயங்க ளடங்கியிருக்கின்றன; ஸ்ரீராமலட்சுமண, சீதாதேவியின் ஜனனமும், அத்தேவிக்குப் பல பேர் வந்ததற்குக் காரணமும், வேறு அனேக ரகசியங்களு மடங்கியிருக்கின்றன. இதில் அனேக சித்திரப் படங்களடங்கி யிருக்கின்றன. **விலை ரூபாய் ஐந்து.**

| | | |
|---|---|---|
| திருக்குத்திருசிய விவேகம் | 0 | 2 |
| நானா ஜீவவாதக்கட்டளை-குறிப்புரையுடன் | 0 | 4 |
| தருக்காமிருதமும் பிரஸ்தான பேதமும் | 0 | 8 |
| கைவல்யம் (பொன்னம்பல சுவாமிகள் உரை) | 2 | 0 |
| ,, (சச்சிதானந்த சுவாமிகளுரை) | 1 | 4 |
| ,, வினா - விடை - வசனம் | 1 | 4 |
| ஸ்ரீ பஞ்சதசி (2-வால்யம்) வசனம் | 10 | 0 |
| சூதசங்கிதாசாராமிர்த வசனம் | 1 | 0 |
| ஹடயோகப் பிரதீபிகை | 1 | 8 |
| பரமார்த்த நியாயத் தீர்ப்பு | 0 | 12 |
| வேதாந்த சூளாமணி - உரையுடன் | 1 | 4 |
| ஆத்ம போதமும் தத்துவபோதமும் | 0 | 5 |
| தத்துவமசி மகா வாக்யம் | 0 | 2 |
| பிரம்மவித்தா சீர்வாதபத்ததி | 0 | 1 |
| சீதாசாரத் தாலாட்டு-உரையுடன் | 0 | 4 |

| | | |
|---|---|---|
| ஸ்ரீ சங்கராசாரிய நீலகண்டாசாரிய சம்வாதம் | 0 | 4 |
| ஒழிவிலொடுக்கம் (உரை) | 1 | 0 |
| பிரபோத சந்திரோதய வசனம் | 1 | 0 |
| குமாரதேவ சாஸ்திரக் கோவை | 0 | 10 |

| | ரூ. | அ. | | | |
|---|---|---|---|---|---|
| | | | தத்துவாநு சந்தானம் | 2 | 8 |
| அத்துவித உண்மை | 0 | 1 | நியாயப் பிரகாசம் | 4 | 0 |
| தோத்திரக்கொத்து | 0 | 1 | பாலபோதம் | 1 | 0 |
| மநந மாலை | 0 | 2 | விசார சந்திரோதயம் | 1 | 4 |
| அறிவாநந்த சித்தி | 0 | 4 | விருத்தி ரத்நாவலி | 0 | 12 |
| பாட்டியற்கொத்து | 0 | 8 | தருக்க கௌமுதி | 0 | 6 |
| சித்தாந்த பிந்து | 0 | 8 | தருக்க சங்கிரகம் | 0 | 4 |
| வேதாந்த பரிபாஷை | 0 | 10 | தாயுமானவர் (மூலம்) | 0 | 8 |
| தருக்க பரிபாஷை | 1 | 0 | யோக சூத்திரம் | 1 | 0 |
| ரிபுகீதைத் திரட்டு | 1 | 0 | வேதாந்தப் பிரதீபம் | 0 | 12 |
| விவேக சூடாமணி | 0 | 8 | பிரமகீதை | 0 | 5 |
| தோடகம் | 0 | 4 | வேதாந்த பரிச்சேதம் | 0 | 6 |
| சிவமகிம்நஸ்தோத்திரம் | 0 | 1 | அபரோட் சாநுபூதி | 0 | 5 |
| நவநீத சாரம் | 0 | 8 | மகா வாக்கியம் | 0 | 4 |
| திருக்குறள் (2-வால்யம்) | 6 | 0 | குருகீதை | 0 | 6 |
| வியாசபோதினி | 0 | 5 | உத்தர கீதை | 0 | 4 |
| விருத்திப் பிரபாகரம் | 4 | 0 | ராமகீதை | 0 | 3 |
| விசாரசாகரம்(3ம் பதிப்பு | 3 | 4 | பிரபுலிங்கலீலை வசனம் | 0 | 12 |
| வேதாந்தமநந சிந்தாமணி | 4 | 0 | சூதசங்கிதை செய்யுள் | 1 | 8 |
| பஞ்சீகரண முதலியன | 0 | 12 | நைடதம்-உரை | 2 | 0 |
| சங்கர விஜயம் | 1 | 0 | விநோதரசமஞ்சரி | 1 | 2 |
| இந்து பைபில் | 1 | 12 | பிரஹ்மானந்தலகிரி | 0 | 1 |
| நாலடியார் உரை | 1 | 2 | பாகவதத்திரட்டு | 0 | 6 |
| கந்தரநுபூதி உரை | 0 | 6 | அத்யாத்மராமாயணம் | 2 | 8 |
| சிவமகா புராணம் | 5 | 0 | பகவத்கீதை-உரை | 2 | 0 |
| குசேலோபாக்யானம் | 3 | 0 | பழமொழி அகராதி | 2 | 0 |
| திருவாசகம் | 0 | 10 | பட்டணத்தார் பாடல் | 1 | 0 |
| பஞ்சதசப்பிரகரணம் | 1 | 0 | மதவிருக்ஷம் | 1 | 12 |
| பக்தலீலாமிருத வசனம் | 3 | 0 | வேதாந்தசாரம் | 0 | 10 |

**☞ இந்த ஆபீசில் எல்லாச் சாஸ்திரங்களும், நாவல்களும் கிடைக்கும்.**